॥ श्रीः ॥

श्री गुरुचरणारविन्दाभ्यां नमः

# ॥ प्रबोधसुधाकरः ॥

## ஆத்மக்ஞானமிருதக்கடல்.



Translated into Tamil

By

**Vedanta Siromani**

**N. S. Ananthakrishna Sastri,**

*Retd. Sanskrit Pandit.*

With a Foreword

By

**Dewan Bahadur K. S. Ramaswami Sastri,**

*Retd. District Judge.*



Published by the Author.

Price 1—8—0.

॥ श्रीः ॥

# ॥ विषयानुक्रमणिका ॥

# FOREWORD

I am glad to pen this brief word to a work which I regard as the sign and symbol and shrine of the new spirit at work in independent India. My late learned and spiritual and noble-minded father used to say Sri Krishna, Vyasa and Sankara had the most wonderful all-inclusive minds in the world. There was no limit to their catholicity of outlook and integration of spiritual experience.

Sankara is often regarded only as the protogonist of Adwaita. But we must not forget that he uprooted 72 wrong faiths and established six faiths (षण्मतस्थापनाचार्यः) These six faiths are the religions of Sun-worship, Devi-worship, Vishnu-worship, Ganapathi-worship, Siva-worship and Subrahmanya-worship. All these deities are but one Bhagavan or Iswara with different forms and functions ; and all of them are the same as the Noumenal Absolute (Nirguna Brahman) without end, beyond all names and forms and attributes. The great western and Sufi mystics also recognised God-head and, God and their unity. And yet India is today a sect-ridden country disputing and fighting endlessly about God and in the name of God.

Even among spiritual manuals called Prakarana Granthas, Prabodha Sudhakara is not so well-known or so frequently studied as Atmabodha, Dasasloki, Satasloki, Viveka-choodamani and Upadesa Sahasri. I think it is quite as important as they, if not more important than they.

Sankara was as great a devotee as any of the later devotees or builders of the Bhakti philosophy. His poems and songs on diverse aspects of divinity are among the most marvellous in the world and show intellect made incadescent by emotion and emotion kept wise by intellect. His Moha Mudgaram or Bhaja Govindam is on the lips of everybody—be he Adwaiti or Saiva or Vaishnava.

A great feature of Prabhodha Sudhakara is its pervasive Krishna Bhakti. The great Sankara has shown in his Gita Bhashya his peerless devotion to Sri Krishna. The bhashya on Vishnu Sahsranama shows his wonderful Vishnu Bhakti. In fact he sent his mother's soul to Vaikunta yeilding to her last wish. We have all heard about the Dvaya mantra of the Vaishnavas. Its very essence is found in the last verse in Sankara's *Shatpadi* stotra.

नारायण करुगालय शरणं करवाणि तावकौ चरणौ ।

Nay, the first verse in it shows that beatitude

of any type (Saguna or Nirguna) will never come without purity, sinlessness, sense-control, mind control, and love and compassion to all beings. If this is not the highest religion, what is? Let me quote here only three verses from Prabodha Sudhakara :

मूर्तं चैवामूर्तं द्वे एव ब्रह्मणो रूपे ॥ १६९
इत्युपनिषत्तयोर्वा द्वौ भक्तौ भगवदुपदिष्टौ ।
क्लेशादक्लेशाद्वा मुक्तिः स्यादेतयोर्मध्ये ॥ १७०

(as taught in chapter XII of the Gita)

कन्दर्पकोटिसुभगं वाञ्छितफलदं दयार्णवं कृष्णम् ।
त्यक्त्वा कमन्यविषयं नेत्रयुगं द्रष्टुमुत्सहते ॥ १९१
भूतेष्वन्तर्यामी ज्ञानमयः सच्चिदानन्दः ।
प्रकृतेः परः परात्मा यदुकुलतिलकः स एवायम् ॥ १९५

Pandit N. S. Anatakrishna Sastri who has translated this great spiritual poem by Sankara is a great Scholar and a spiritually-minded devotee. His translation is correct and terse and charming I would specially commend the 17th section of the poem which contains a wonderful description of Krishna's beauty and grace. I wish the work of Mr. Sastri wide and growing public appreciation.

MADRAS,
19th May 1954. *K. S. Ramaswami Sastri.*

श्रीरस्तु

श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः

श्रीमहात्रिपुरसुन्दर्यै नमः

# முகவுரை.

---

अज्ञानान्तर्गहनपतितानात्मविद्योपदेशै-

स्त्रातुं लोकान् भवदवशिखातापपापच्यमानान् ।

मुक्त्वा मौनं वटविटपिनो मूलतो निष्पतन्ती

शंभोर्मूर्तिश्चरति भुवने शङ्कराचार्यरूपा ॥

அஞ்ஞானமாகிய இருள் நிரம்பிய ஸம்ஸாரமென்னும் காட்டில் ஸஞ்சாரம் செய்கின்ற மனிதர்கள் ஆத்யாத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம் ஆகிய மூன்றுவித தாபங்களாகிய காட்டுத்தீயினால் எரிக்கப்பட்டுத் துன்பமுறுகையில் அவர்களை அனுக்கிரகம் செய்து உய்விப்பதற்குக் கருணையுற்றவராக சிவபெருமான் மண்ணுலகில் ஸ்ரீ சங்கராசாரியர் என்ற வடிவத்தில் தோன்றி அருள் புரிந்தார். முதலில் தக்ஷிணாமூர்த்தி தேவராக ஆலமரத்தினடியில் வீற்றிருந்து, மௌனவிருதத்திலிருந்துகொண்டே வாமதேவர் முதலிய மாமுனிவர்களுக்கு ஆத்மதத்துவத்தை உபதேசம்செய்து அவர்களுடைய சந்தேகங்களையும் மௌனத்தினாலேயே அறவே அறுத்த அந்தப் பரமசிவன் காலத்தின் கொடுமையினால் நிலவிய ஆஸ்திகமதத்தினழிவை அறிந்து தேவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி "இனிமேல் மௌனம் தகாது" என்று தீர்மானம் செய்து பரமாசாரியராக மண்ணுலகில் தோன்றி ஆஸ்திகமதத்தை உய்வித்து ஞானமார்க்கத்தையும் நிலைநாட்டினார்.

ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் என்ற முறைப்படி பிரம்மஸூத்திரபாஷ்யம், பத்து உபநிஷத்துக்களுக்கு பாஷ்யம், பகவத்கீதாபாஷ்யம் ஆகிய சிறந்த நூல்களையும் இயற்றி சீடர்களுக்கு உபதேசம் செய்து, மற்ற மதங்களையும் வென்று, ஆத்மவித்தையைப் பிரதிஷ்டை செய்தல் முதலிய அரிய செயல்களை தன்னுடைய அற்பமான வாழ்க்கை நாளிலேயே நிறைவேற்றினர் என்பது வியக்கத் தக்கது மட்டுமின்றி "இத்தகைய செயல்கள்" ஸாதாரண மனிதனால் செய்ய இயலாது என்று ஆஸ்திகர்கள் யாவரும் ஒப்பத்தக்க விஷயம். நூல்களும் அத்தகையவரை சிவ பெருமானுடைய அவதாரம் என்று கூறுகின்றன. இந்த விஷயத்திலும் ஆஸ்திகர்கள் ஐயம்கொள்ளுவதில்லை.

வேதம் முதலியவற்றைக் கற்காதவர்களும் ஆத்மதத்துவத்தை உணர வன்மையுறவேண்டும் என்று கருதி அதிகாரபேதத்தைப் பின்பற்றி மிகக்கடின விஷயங்களையும் இனிய செய்யுட்களாலும் சொற்களாலும் தொகுத்து, உலகப்பற்றற்ற துறவியாகவே ஸஞ்சரித்து ப்ரவிருத்தி மார்க்கத்தையும் [தர்மநெறியையும்] நிவ்ருத்திமார்க்கத்தையும் (ஞானமார்க்கத்தையும்) காப்பாற்றினர் என்றால் உலகத்தின் உய்வித்தல் என்ற ஒரு பயனையே மனதில் கருதிய அந்தப் பரமாசாரியருடைய வள்ளல்தன்மையை வர்ணிக்க முடியுமா ?

ஆஸ்திகரஸிகர்களே, ஸர்வஜ்ஞராகிய அந்தப் பரமாசாரியர் இயற்றிய நூல்கள் அனைத்தையும் ஒரு மனிதன் தன்னுடைய வாழ்க்கையில் படித்து அதன்படி நடக்க வேண்டுமென்ற எண்ணத்தைப் பெற்று தக்க முயற்சி செய்தலே அரிது என்று இந்த அற்பனுடைய அடியேனுடைய அபிப்பிராயம். வேற்றுமையின்றி பலவிதங்களான ஸ்தோத்திரங்கள் அந்தப் பரமகுருவினால் இயற்றப்பட்டுள்ளன. இனிய பாஷையில் இயற்றப்பட்ட அவைகள் படிப்பவர்க

ருடைய விருப்பங்களைப் பூர்த்திசெய்பவையும் மனதை சந்தோஷிக்கச்செய்பவையுமாக உள.

உபநிஷத்துக்களின் ஸாரத்தை "பிரகரணங்கள்" என்று கூறப்படும் பல நூல்களால் போதனை செய்துள்ளார் சாஸ்திரங்களில் அதிகப் பயிற்சியில்லாதவர்களுக்கு இந்தப் பிரகரணங்கள் அறிவை ஊட்டுகின்றன. அவ்வாறு இயற்றப்பெற்ற பிரகரணநூல்களில் ஒன்றாகிய "प्रबोधसुधाकरः" என்பது மிகவும் இனிய செய்யுட்களால் தொகுக்கப்பட்டது இந்தப் பிரகரணத்தில், மனிதன் விஷயங்களின் குறைகளை நன்கு உணர்ந்து அடையவேண்டிய உண்மையான அறிவைப் பெறுவதற்கு முயற்சி செய்யும்படி நற்சுவை நிரம்பிய சொற்களால் ஆசாரியர் உபதேசமளித்துள்ளார். 19 உட்பிரிவுகள் அடங்கிய இந்த நூல் உடல், மனது, பிராணன், பொறிகள் என்பவைகளைக்காட்டிலும் ஆத்மா வேறு என்றும் நன்கு உணர்த்தி, மனத கியானம் செய்யவேண்டிய பரம்பொருளையும் உபதேசம் செய்கின்றது. "பக்தியின்றி முக்தியில்லை" ஆதலால் அந்த பக்தியின் சிறப்பையும் நன்கு உபதேசிப்பதுடன் ஸகுணபக்தி நிர்குணபக்திக்குக் காரணம் என்பதையும் அத்தகைய ஸகுணபக்தி சிறந்தது என்பதையும் உதாரணமூலமாக நன்கு விளக்குகின்றது.

तावद्रागादयः स्तेनास्तावत्कारागृहं गृहम् ।
तावन्मोहोऽङ्घ्रिनिगडो यावत्कृष्ण न ते जनः ॥

என்று ஸ்ரீமத் பாகவதத்தில் பிரம்மஸ்துதியில் கூறப்பட்டுள்ளது. "இவன் என்னைச் சேர்ந்தவன்" என்ற அபிமானம் (சிநேகம்) ஸ்ரீகிருஷ்ணபரமாத்மனுக்கு ஒரு ஜீவனிடம் எப்பொழுது நிலவுகின்றதோ, அப்பொழுது அவனுடைய காமம், வெகுளி முதலிய தோஷங்கள், பந்தத்திற்கும் துன்பங்களுக்கும் காரணமாய் சிறைக்கு நிகரான

இல்லம், காலுக்கு விலங்காகிய அவிவேகம் என்பவைக ளெல்லாம் அவனை விட்டு விலகுகின்றன. அத்தகைய அபிமானம் ஜீவனிடத்தில் பரமனுக்கு நிலவுவதற்குக் காரணம் பக்தனாகிய அவனுடைய இடைவிடாத பக்தி யென்னும் அன்பேயாகும். ஆகவே, அந்தப் பக்தனுடைய எல்லா செயல்களும் பகவானையே குறியாகக்கொண்டவை என்பது திண்ணம். அவன் எளிதில் பேரானந்தம் பெறுகி ருன். இந்த விஷயமும் அருமையாக விளக்கப்பட்டுளது.

பரமாசாரியருடையவும், பரதேவதையாகிய மகா த்ரிபுரஸுந்தரியினுடையவும் தவிர்க்க முடியாத பிரேர ணையினாலும இல்லறவாழ்க்கையில் "மகாக்னிசயனம்" என்ற மூன்று கருடசயனங்களையும் முறைப்படி அனுஷ் டித்து, பிறகு துறவறத்தை ஏற்று பிரம்மீபூதராகிய தந்தையினுடைய (பிரம்மஸ்ரீ சேஷாத்திரி தீக்ஷிதர் அவர் களுடைய) அனுக்கிரகத்தினாலும், அவர்களுடைய அரு ளேயே ஸாதனமாகவும் பயனாகவும் மனதில் உறுதிகொண்டு இந்த "प्रबोधसुधाकरः" தமிழில் மொழி பெயர்க்கப்பெட்டு மூலத்துடனும் உரையுடனும அச்சிடப்பட்டுள்ளது.

ஆஸ்திகர்கள் இதனைக் கையாண்டு, கண்ணுற்று ஸம்ஸ்கிருதபாஷையிலுள்ளதை தமிழில் மொழிபெயர்த் திருப்பதால் தமிழுரையையும் பார்த்து பொருளைச் சுவை த்து அறிவுற்ருல் அடியேனுடைய முயற்சி பயன்படுவது டன், அதனையே பரமாசாரியருடையவும், மகா த்ரிபுர ஸுந்தரியினுடையவும், மகாக்னிசித்தாகிப் பிறகு பிரம்மீ பூதருமான பிதாவினுடையவும் பேரருளாகக் கருதி மகிழ் ச்சிபெறக் காரணமாகும்.

எனது வேண்டுகோளிக்கிணங்கி பெரிய மனதுடன் 'முன்னுரை' எழுதிய ஸ்ரீ கெ. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரி கள் அவர்களுக்கு மனமார்ந்த வந்தனத்தையும் நன்றி யையும் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

இதனை அச்சிட்டு வெளிப்படுத்த உதவிபுரிந்த Scholar Press அதிகாரிகளுக்கும் Proof பிழைகளைத் திருத்தி உதவி புரிந்த பிரம்மஸ்ரீ ஸோமஸுந்தர தீக்ஷிதர் அவர்களுக்கும் மனமார்ந்த நன்றி செலுத்துவதுடன், ஸர்வாபீஷ்ட முண்டாகுமாறு பரதேவதையையும் ஆழ்ந்த பக்தியுடன் அடிக்கடி வணங்குகிறேன்.

இங்ஙனம், ஸாதுவிதேயன்,

*Vedanthasiromani* ***N. S. Ananthakrishna Sastri,***

*Retired Sanskrit Pandit,*

*Board High School*, UDUMALPET,

COIMBATORE Dt.



॥ श्रीमच्छंकरभगवत्पूज्यपादाः ॥

SRI VANI VILAS PRESS SRIRANGAM

॥ श्रीः ॥

श्री गुरुचरणारविन्दाभ्यां नमः

# ॥ प्रबोधसुधाकरः ॥

# ஆத்மஞானமிருதக்கடல்.



## १. देहनिन्दाप्रकरणम् ॥

नित्यानन्दैकरसं सच्चिन्मात्रं स्वयंज्योतिः ।
पुरुषोत्तममजमीशं वन्दे श्रीयादवाधीशम् ॥ १

### தேகநிந்தைப்பிரகரணம்.

*நித்தியானந்தஸ்வரூபமாயும், ஸத்தாகவும், சித்தாகவும் தானாகவே விளங்கும் பிரகாசஸ்வரூபமாகவும், சரீரங்களாகிய புரங்களில் வசிக்கும் சிறந்த புருஷனாகவும், (அழிவில்லாமையால் உலகம் தோன்றுவதற்கு முன்னமேயே இருக்கின்றவரும்) பிறப்பற்றவரும், உலகங்களுக்கெல்லாம் ஈசுவரனும், யாதவர்களுடைய நாயகனுமாகிய ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை வணங்குகின்றேன்.*

यं वर्णयितुं साक्षाच्छ्रुतिरपि मूकेव मौनमाचरति ।
सोऽस्माकं मनुजानां किं वाचां गोचरो भवति ॥ २

*எந்த தேவரை வர்ணிப்பதற்கு மறைகூட ஊமையாகின்றதோ, அப்படிப்பட்டவர் மனிதர்களாகிய நம்முடைய வசனங்களுக்குப் பொருளாக இருக்கமுடியுமா?*

यद्यप्येवं विदितं तथाऽपि परिभाषितो भवेदेव ।
अध्यात्मशास्त्रसारैर्हरिचिन्तनकीर्तनाभ्यासैः ॥ ३

இது தெரிந்த விஷயமே. ஆயினும், ஆத்மாவின் தத்வத்தைப் போதிக்கும் வேதாந்தவசனங்களை முக்கியமாகக் கொண்டு ஹரியினுடைய தியானம், கீர்த்தனம் இவைகளின் தொடர்ச்சியினால் அந்த பகவான் ஞானிகளால் கூறப்படுகிறார் என்பதில் ஐயமில்லை.

क्लृप्तैर्बहुभिरुपायैरभ्यासज्ञानभक्त्याद्यैः ।
पुंसो विना विरागं मुक्तेरधिकारिता न स्यात् ॥ ४

தொடர்ச்சியான பயிற்சி, ஞானம், பக்தி முதலான பல உபாயங்கள் ஏற்பட்டபோதிலும் வைராக்கியமின்றி மனிதனுக்கு மோக்ஷமார்க்கத்தில் அதிகாரம் கிடையாது.

वैराग्यमात्मबोधो भक्तिश्चेति त्रयं गदितम् ।
मुक्तेः साधनमादौ तत्र विरागो वितृष्णता प्रोक्ता ॥ ५

மோக்ஷத்திற்கு வைராக்கியம், ஆத்மஞானம், பக்தி என்ற மூன்றும் மூலகாரணங்கள். அதில் வைராக்கியம் என்பது பற்றின்மை என்று கூறப்படுகின்றது.

सा चाहंममताभ्यां प्रच्छन्ना सर्वदेहेषु ।
तत्राहंता देहे ममता भार्यादिविषयेषु ॥ ६

அந்த வைராக்கியம் 'நான்' என்றும், 'என்னுடையது' என்றுமாகிய அபிமானங்களால் எல்லாப் பிறவிகளிலும் மறைந்துள்ளது. தன்னுடைய தேகத்தில் 'நான்' என்ற அபிமானம் 'அஹந்தை' என்றும், மனைவி, மக்கள் முதலிய மற்றப் பொருள்களில் என்னுடையது என்ற அபிமானம் 'மமதை' என்றும் கூறப்படுகிறது. இத்தகைய இரு அபிமானங்களால் வைராக்கியம் தடைபெற்றதாக இருக்கின்றது.

देहः किमात्मकोऽयं कः सम्बन्धोऽस्य वा विषयैः ।
एवं विचार्यमाणेऽहंताममते निवर्तेते ॥ ७

இந்த உடல் எத்தகையது? புலப்படும் பொருள்களுடன் இந்த உடலுக்குள்ள சம்பந்தம யாது? என்ற விஷயத்தை நன்கு சர்ச்சை செய்து அறிந்துகொண்டால் மேற்கூறப்பட்ட அஹங்காரமமகாரங்கள் நீங்கிவிடும்.

स्त्रीपुंसोः संयोगात्संपाते शुक्रशोणितयोः ।
प्रविशञ्जीवः शनकैः स्वकर्मणा देहमाधत्ते ॥ ८

ஸ்திரீபுருஷர்களுடைய சுக்லசோணிதங்களின் சேர்க்கையில் ஒரு ஜீவன் தன்னுடைய முன்ஜன்ம வினையினால் தனக்குரிய தேகத்தை அடைகிறான்.

मातृगुरूदरदर्यां कफमूत्रपुरीषपूर्णायाम् ।
जठराग्निज्वालाभिर्नवमासं पच्यते जन्तुः ॥ ९

கபம், மூத்திரம், மலம் என்ற அசுத்தமான பொருள்கள் நிரம்பிய தாயாருடைய கர்ப்பப்பையாகிய பெரிய குகையில் அந்த ஜீவன் ஜாடராக்னியின் ஜ்வாலைகளால் ஒன்பது மாதகாலம் தாபத்தை அனுபவிக்கின்றான்.

दैवात्प्रसूतिसमये शिशुस्तिरश्चीनतां यदा याति ।
शस्त्रैर्विखण्ड्य स तदा बहिरिह निष्कास्यतेऽतिबलात् ॥

துரதிருஷ்டத்தினால் அந்தக் குழந்தை அங்கே குறுக்காகக் கிடந்துவிட்டால் அப்பொழுது கத்தி முதலிய கருவிகளால் அறுக்கப்பட்டு நிர்ப்பந்தமாக வெளியே தள்ளப்படுகின்றது.

अथवा यन्त्रच्छिद्राद्यदा तु निःसार्यते प्रबलैः ।
प्रसवसमीरैश्च तदा यः क्लेशः सोऽप्यनिर्वाच्यः ॥ ११

அப்படியில்லாவிடினும் பிரஸவகாலத்தில் காற்றின் சக்தியினால் யோனித்துவாரத்திலிருந்து வெளியேவரும்போது உண்டாகின்ற துக்கம் கூறமுடியாதது.

आधिव्याधिवियोगात्मीयविपत्कलहदीर्घदारिद्र्यैः ।
जन्मानन्तरमपि यः क्लेशः किं शक्यते वक्तुम् ॥ १२

பிறந்த பிறகு ஒருவனுடைய வாழ்க்கையில் மனோ துக்கம், வியாதி, பந்துக்களின் பிரிவு, ஆபத்து, கலகம், நீண்டகாலத்து வறுமை முதலியவற்றினால் உண்டாகும் கஷ்டங்கள் கூறத்தக்கவையா ?

नरपशुविहंगतिर्यग्योनीनां चतुरशीतिलक्षाणाम् ।
कर्मनिबद्धो जीवः परिभ्रमन्यातना भुङ्क्ते ॥ १३

வினைகளால் கட்டுப்பட்டவனாக ஜீவன், மனிதன், விலங்கு, பறவை முதலான எண்பத்துநாலு லக்ஷம் பிறவிகளில் பிறந்து பற்பல துக்கங்களை அனுபவிக்கிறான்.

चरमस्तत्र नृदेहस्तत्रोज्जन्मान्वयोत्पत्तिः ।
स्वकुलाचारविचारः श्रुतिप्रचारश्च तत्रापि ॥ १४

அப்பிறவிகளில கடைசியான மனிதப்பிறவி சிறந்தது. அதிலும் சிறந்த குலத்தில் பிறத்தல், தன்னுடைய குலாசாரங்களைப் பின்பற்றுதல், அதிலும் வேதங்களின் கருத்துக்களை உணர்ந்து அதன்படி நன்னெறியில் நடத்தல் என்பவை மேன்மேலும் சிறந்தவை

आत्मानात्मविवेको नो देहस्य च विनाशिताज्ञानम् ।
एवं सति स्वयमायुः प्राज्ञैरपि नीयते मिथ्या ॥ १५

இப்படியிருக்கையில் ஆத்மா, அனாத்மா என்பவைகளின் அறிவின்றியும், இந்த உடல் நாசமடையக்கூடியது என்ற அறிவின்றியும் இருந்தால் அவர்கள் புத்திசாலிகளா

யினும் அவர்களால் தங்களுடைய ஆயுள் வீணாகவே கழிக்கப்படுகின்றது.

आयुःक्षणलवमात्रं न लभ्यते हेमकोटिभिः क्वापि ।
तच्चेद्गच्छति सर्वं मृषा ततः काऽधिका हानिः ॥ १६

ஆயுளின் க்ஷணம், லவம் ஆகிய மிகச் சிறிதான அளவு கூட கோடிக்கணக்கான பொன்னை விரயம் செய்தாலும் கிடைப்பதரிது. அத்தகைய வாழ்க்கையில் நாட்கள் முழுவதும் வீணாக்கப்பட்டால் அதைக்காட்டிலும் பெரிதான கஷ்டம் யாது?

नरदेहातिक्रमणात्प्राप्तौ पश्वादिदेहानाम् ।
स्वतनोरप्यज्ञाने परमार्थस्यात्र का वार्ता ॥ १७

மானிடப்பிறவியை வீணாகக் கழித்து அதன்பயனாக விலங்கு முதலிய பிறவிகளில் பிறந்தால் தன்னுடைய உடலைப் பற்றியே அறிந்துகொள்ளத் திறமையற்ற அப்பிறவிகளில் ஆத்மதத்துவத்தை உணர்வது அரிது எனபதுபற்றிக் கூறவும் வேண்டுமா?

सततं प्रवाह्यमानैर्वृषभैरश्वैः खरैर्गजैर्महिषैः ।
हा कष्टं क्षुत्क्षामैः श्रान्तैर्नो शक्यते वक्तुम् ॥ १८

எப்பொழுதும் வண்டி முதலானவைகளில் கட்டப்பட்டு மனிதர்களால் வேலைசெய்யும்படி நியமிக்கப்பட்ட எருதுகள், குதிரைகள், கழுதைகள், யானைகள், கடாக்கள் முதலிய மிருகங்கள் பசியினால் வருந்தி மிகவும் களைப்புற்றவைகளாயினும் தங்களுடைய வருத்தத்தை வெளியில் கூற முடியாமலிருக்கின்றன. என்ன கஷ்டம்!

रुधिरत्रिधातुमज्जामेदोमांसास्थिसंहतिर्देहः ।
स बहिस्त्वचा पिनद्धस्तस्मान्नो भक्ष्यते काकैः ॥ १९

இந்த உடல் ரத்தம், வாதம், பித்தம், கபம், கொழுப்பு, மாமிசம், எலும்பு இவைகளின் தொகுதியினுலுண்டானது. அது வெளியே தோலினுல் மூடப்பட்டிருப்பதினுல் காகங்களால் சாப்பிடப்படுகிறதில்லை.

नासाग्राद्वदनाद्वा कफं मलं पायुतो विसृजन् ।
स्वयमेवैति जुगुप्सामन्तः प्रसृतं च नो वेत्ति ॥ २०

கபம், மலம் முதலியன மூக்கின் துவாரங்களிலிருந்தோ, வாய், அபானத்துவாரம் வழியாகவோ வெளியே வரும்போது அதைக்கண்டு மனிதன் அருவருப்படைகிறுன்; ஆனுல், உடலினுள்ளே இவைகள் இருப்பதை நினைக்கின்றதில்லை.

पथि पतितमस्थि दृष्ट्वा स्पर्शभयादन्यमार्गतो याति ।
नो पश्यति निजदेहं चास्थिसहस्रावृतं परितः ॥ २१

வழியில் கிடக்கின்ற எலும்பைக் கண்டு மனிதன் அதனைத் தொடுவதற்கு அஞ்சி வேறுவழியில் நடக்கின்றுன்; ஆனுல் தன்னுடைய உடல் அத்தகைய ஆயிரக்கணக்கான எலும்புகளால் அமைக்கப்பட்டுள்ளது என்று உணருகிற

केशावधि नखराग्रादिदमन्तः पूतिगन्धसम्पूर्णम् ।
बहिरपि चागरुचन्दनकर्पूराद्यैर्विलेपयति ॥ २२

நகம்தொட்டு கூந்தல்வரையில் இந்த உடல் துர்நாற்றப் பொருள்கள் நிறைந்தது. அப்படிப்பட்ட இந்த உடலை அகில், சந்தனம், பச்சைக்கர்ப்பூரம் முதலான வாசனைப் பொருட்களைப்பூசி வாசனையுள்ளதாகச்செய்ய முயலுகிறுன்.

यत्नादस्य पिधत्ते स्वाभाविकदोषस[...]तम् ।
औपाधिकगुणनिवहं प्रकाशयञ्छ्लाघते मूढः ॥ २३

இயற்கையிலுள்ள குற்றக்குவியலை மிக முயற்சியுடன் மறைக்க முயலுகிறான். செயற்கையினால் குணங்களிருப்பதாகக் காண்பித்துப் புகழ்கின்றான். அவன் மூடன்.

क्षतमुत्पन्नं देहे यदि न प्रक्षाल्यते त्रिदिनम् ।
तत्रोत्पतन्ति बहवः क्रिमयो दुर्गन्धसंकीर्णाः ॥ २४

உடலில விரணம் உண்டாகி அதனை மூன்று நாள் ஜலத்தினால் கழுவாவிடில் துர்நாற்றமுள்ள புழுக்கள் அங்கு கிளம்புகின்றன.

यो देहः सुप्तोऽभूत्सुपुष्पशय्योपशोभिते तल्पे ।
सम्प्रति स रज्जुकाष्ठैर्नियन्त्रितः क्षिप्यते वह्नौ ॥ २५

நல்ல மிருதுவான மலர்களால் அமைக்கப்பெற்ற படுக்கையிற் படுத்து துயிலுற்ற உடல் (பிராணவாயு பிரிந்த பிறகு) மூங்கில், கயிறு ஆகியவற்றால் கட்டப்பட்டு நெருப்பில் வைக்கப்படுகிறது.

सिंहासनोपविष्टं दृष्ट्वा यं मुदमवाप लोकोऽयम् ।
तं कालाकृष्टतनुं विलोक्य नेत्रे निमीलयति ॥ २६

சிங்காசனத்தில் வீற்றிருந்த எந்த உடலைப் பார்த்து உலகம் சந்தோஷமடைந்ததோ, அந்த உடல் காலனால் இழுக்கப்பட்டு உயிர நீங்கியவுடன் அதைப் பார்த்து உலகம் வெறுப்பினால் கண்களை மூடிக்கொள்ளுகின்றது.

एवंविधोऽतिमलिनो देहो यत्सत्तया चलति ।
तं विस्मृत्य परेशं वहत्यहन्तामनित्येऽस्मिन् ॥ २७

இவ்வாறு மிகவும் அசுத்தமானவுடல் யாருடைய சம்பந்தத்தினால் அசைக்கின்றதோ, அப்படிப்பட்ட ஆத்மாவே பரம்பொருள், பரமாத்மாவெனக் கூறப்படுகிறார். அவரை மறந்து இந்த அழியக்கூடிய தேகத்தில் 'நான்' என்ற அபிமானத்தை மூடன் வளர்த்துக்கொ

क्वात्मा सच्चिद्रूपः क्व मांसरुधिरास्थिनिर्मितो देहः ।
इति यो लज्जति धीमानितरशरीरं स किं मनुते ॥ २८

ஸச்சிதானந்தரூபியான ஆத்மா எங்கே? மாமிசம், ரத்தம், எலும்பு இவைகளால் அமைக்கப்பெற்ற உடல் எங்கே? என்பதை உணர்ந்து இவ்விரண்டினையும் ஒன்றாக எண்ண வெட்கப்படுகின்ற புத்திமான் ஆத்மாவினும் வேறான உடலை ஆத்மாவாக எவ்வாறு எண்ணுவான்?

---

## २. विषयनिन्दाप्रकरणम् ॥

मूढः कुरुते विषयजकर्दमसंमार्जनं मिथ्या ।
दुरदृष्टवृष्टिविरसो देहो गेहं पतत्येव ॥ २९

### பொருள்களின் நிந்தைப்பிரகரணம்.

மழையினால் சுவர் நனைந்து, கரைந்து, பலமற்று, இடிந்து கீழேவிழும் தருணத்தில் இருக்கின்றது ஒரு கிருஹம். அதைச் சேற்றைப்பூசி சுத்தம்செய்து நிலைநிறுத்த ஒருவன் முயலுவதுபோல், ஆத்மஞானமில்லாத மூடன், புண்ணியம் நசித்துப் பாபமாகிய மழையினால் பலம்குன்றி நாசமடையும் தருணத்திலுள்ள சரீரத்தை விஷயங்களுடைய சம்பந்தத்தினாலுண்டாகின்ற சிற்றின்பமாகிய சேற்றினால் சுத்தம் செய்து நிலைநிறுத்திக்கொள்ள முயலுகிறான். அதனால் இந்த தேகமாகிய கிருஹம் கீழே விழாமலிருக்குமா? நிச்சயமாக இல்லை.

भार्या रूपविहीना मनसः क्षोभाय जायते पुंसाम् ।
अत्यन्तं रूपाढ्या सा परैर्वशीक्रियते ॥ ३०

அழகில்லாமனைவி கணவனுக்கு மனதில் மிக மகிழ்ச்சிக் குறைவையுண்டாக்குகிறாள். மிக அழகுவாய்ந்தவள் பிறரால் வசப்படுத்தப்படுகிறாள்.

यः कश्चित्परपुरुषो मित्रं भृत्योऽथवा भिक्षुः ।
पश्यति हि साभिलाषं विलक्षणोदाररूपवतीम् ॥ ३१

நண்பன், வேலைக்காரன், துறவி ஆகிய யாராவது வேற்று மனிதன் ஒப்புயர்வற்ற அழகுவாய்ந்த மங்கையை விருப்பத்துடன் பார்க்கிறான்.

यं कश्चित्पुरुषवरं स्वभर्तुरतिसुन्दरं दृष्ट्वा ।
मृगयति किं न मृगाक्षी मनसेव परस्त्रियं पुरुषः ॥ ३२

புருஷன் பிறனுடைய மனைவியை மனதினால் விரும்புவதுபோல ஸ்திரீயும் தன்னுடைய கணவனைக்காட்டிலும் அதிக அழகுள்ள புருஷனைக் கண்டு அடைய விரும்புகிறாள்.

एवं सुरूपनार्या भर्ता कोपात् प्रतिक्षणं क्षीणः ।
ना लभते सुखलेशं बलिमिव बलिभुग् बहुष्वेकः ॥ ३३

பலியன்னத்தைத் தின்கின்ற அநேக காகங்களுக்கிடையில் ஒரு காகம் மிகவும் வருத்தமுறுவதுபோல் மேற்கூறியவாறு அழகிய மனைவியால் மனிதன் ஒவ்வொரு க்ஷணத்திலும் கோபத்தினால் வருந்தியவனாக சிறிதுகூட சுகத்தை அடைகிறானில்லை.

वनिता नितान्तमज्ञा स्वाज्ञामुल्लंघ्य वर्तते यदि सा ।
शत्रोरप्यधिकतरा पराभिलाषिण्यसौ किमुत ॥ ३४

மனையாள் மிகவும் அறிவற்றவளாகவும் கணவனின் கட்டளையை மீறி நடக்கின்றவளாகவும் இருந்தால் அவள் பகைவனைக்காட்டிலும் கொடியவளாவாள். அவள் வேறு புருஷனை விரும்புகிறவளாகவும் இருந்தால் கூறவும் வேண்டுமா?

लोको नापुत्रस्यास्तीति श्रुत्याऽस्य कः प्रभाषितो लोकः ।
मुक्तिः संसरणं वा तदन्यलोकोऽथवा नाद्यः ॥ ३५

'புத்திரன் இல்லாதவனுக்கு உலகமில்லை' என்று மறையினால் கூறப்படுகிறது. அந்த உலகம் யாது? (உலகம் என்ற பதத்தின் பொருள் யாது?) மோக்ஷமா? ஸம்ஸாரசுகமா? அல்லது இவ்விரண்டைக்காட்டிலும் வேறு உலகமா? மோக்ஷமல்ல என்பது உறுதி.

[புத்திரசுகமே சிறந்தது என்ற கருத்தை ஆசாரியாரவர்கள் நிராகரிக்கின்றார் :—

सर्वेऽपि पुत्रभाजस्तन्मुक्तौ संसृतिर्भवति ।
श्रवणादयोऽप्युपाया मृषा भवेयुस्तृतीयेऽपि ॥ ३६

तस्माप्त्युपायसत्वाद् द्वितीयपक्षेऽप्यपुत्रस्य ।
पुत्रेष्ट्यादिकयागप्रवृत्तये वेदवादोऽयम् ॥ ३७

नानाशरीरकष्टैर्धनव्ययैः साध्यते पुत्रः ।
उत्पन्नमात्रपुत्रे जीवितचिन्ता गरीयसी तस्य ॥ ३८

जीवन्नपि किं मूर्खः प्राज्ञः किं वा सुशीलभाग्भविता ।
जारश्चोरः पिशुनः पतितो द्यूतप्रियः क्रूरः ॥ ३९

पितृमातृबन्धुघाती मनसः खेदाय जायते पुत्रः ।
चिन्तयति तातनिधनं पुत्रो द्रव्याद्यधीशताहेतोः ॥ ४०

உலகில் எல்லோரும் புதல்வனுள்ளவர்கள் என்று வைத்துக்கொண்டால் அவர்கள் உலகசுகம் கிடைத்தவர்கள் என்று அர்த்தம் கொள்ளவேண்டும். அந்த சுகம் ஸம்ஸார சுகமேயாகும். அதை 'முக்திசுகம்' என்று கூறுவது முரண்பாடு. அதன் பொருள் புதல்வனுள்ளவர்களுக்கு உலகம் உண்டு என்பதால் அவர்கள் அனுபவிக்கும் சுகம், துக்கங்களிலிருந்து விடுதலை என்று ஒப்புக்கொள்ளக்கூடிய 'முக்தி'சுகம் ஆகமுடியுமா? புத்திரனுள்ளவர்கள் அந்தக்

காரணத்தைக்கொண்டு (புத்திரப்பேறினால்) முக்தர்களாவதில்லை. மாறாக ஸம்ஸாரிகளாகத்தானிருக்கிறார்கள். ஆகையால் முதலாவது கூறியது ஏற்கத்தக்கதில்லை மோக்ஷத்திற்குக் காரணம் ஞானம் (ஆத்மஞானம்) என்றும், அந்த ஆத்மஞானம் சிரவணம, மனனம், நிதித்தியாஸனம் என்கிறவைகளால் உண்டாகிறதென்றும் உபனிடதங்கள் கூறுகின்றன. ஆகையால் புத்திரனில்லாதவனுக்கு உலகமில்லை என்ற மூன்றாவது பக்ஷம் சரியன்று (வேதாந்தவசனங்கள் ஆத்மாவைப்பற்றிக் கூறுகின்றன. அவைகளின் முக்கியமான தாத்பரியத்தை உறுதியாக அறிந்துகொள்வதற்கு மனம் செய்யும் செயல் சிரவணம் என்றும், அப்பிரதிபத்தி (நம்பிக்கையின்மையினால் அறிவின்மை) விப்பிரதிபத்தி, (சந்தேகம்) அன்யதாப்பிரதிபத்தி, (திருபு—வேறுவிதமாகத் தெரிந்து கொள்ளுதல்) என்பவைகளை அகற்றுவதற்கு வேண்டத்தக்க யுக்திகளால் அந்த அறிவை அசைவற்றதாகச் செய்துகொள்ளுதல் மனனம். பிறகு அந்த ஞானம் தீபஜ்வாலைபோல் ஒரே நிலையில் இருக்கும்படியாகச் செய்வதற்கு தியானம் செய்தல் நிதித்தியாஸனம் என்றும் கூறப்படுகிறது.) சம்சாரபந்தம் வேரற்று இன்பதுன்பங்களழிந்து பேரானந்தானுபவமாகிய மோக்ஷசுகத்திற்குரிய சாதனங்கள் உள்ளமையால் புத்திரப்பேறற்றவனுக்கு மோக்ஷம் கிட்டாது என்கிற இரண்டாவது பக்ஷமும் சரியன்று. ஆகையால், புதல்வனில்லாத மனிதன் உலகசுகத்தில் பற்றுள்ளவனாகவே இருந்தால் அவன் பயனையளிக்கும் புத்திரகாமேஷ்டி முதலான காமியகர்மாக்களைச் செய்யவேண்டும் என்று அத்தகைய தர்மச்செயல்களைப் புகழ்ந்து கூறுதலேயாகும் அந்த வசனத்தின் கருத்து. புதல்வன் தோன்றாமையால் வருந்திய பிறகு தேகத்தினால் பற்பல தவம் முதலியவற்றையும் செய்து, செல்வங்களைச் செலவுசெய்து பல புண்ணியகாரியங்களையும் செய்து அதன் பய

னுகப் புதல்வன் பிறந்தால் அவனுக்கு நீண்ட ஆயுள் நிலைக்க வேண்டுமே என்று பெரிய சிந்தை உண்டாகிறது. நீண்ட ஆயுளுள்ளவனாயினும் எதிர்காலத்தில் அவன் மூடனாக இருப்பானோ, அல்லது புத்திசாலியாகவோ, நல்ல சுபாவமுள்ளவனாகவோ, பிறர்மனைவியை விரும்புகிறவனாகவோ, திருடனாகவோ, கோட்சொல்லுகிறவனாகவோ, தீயகாரியங்களைச் செய்கிறவனாகவோ, சூதாட்டத்தில் பிரியமுள்ளவனாகவோ, கடூரத்தன்மையுள்ளவனாகவோ (இருப்பானோ என்றும் பல கவலைகள்), தாய்தந்தையர்களைக் கொலைசெய்யும் சுபாவமுள்ளவனாக இருந்தால் அந்த மகன் மனவருத்தத்திற்குக் காரணமாகிறான். செல்வம் முதலியவற்றில் உரிமையை விரும்புகிறதினால் தந்தையின் மரணத்துக்கு சூழ்ச்சி செய்வான்.

सर्वगुणैरुपपन्नः पुत्रः कस्यापि कुत्रचिद्भवति ।
सोऽल्पायू रुग्णो वा ह्यनपत्यो वा तथाऽपि खेदाय ॥ ४१

உலகில் எங்கேயாவது சிலருக்குத்தான் நற்குணங்களெல்லாம் நிறைந்த புதல்வன் பிறக்கிறான். அவன் நீடித்த ஆயுளில்லாதவனாகவோ, வியாதியுள்ளவனாகவோ, அல்லது ஸந்ததியற்றவனாகவோ இருந்தால் மனதிற்குத் துன்பம் தான் உண்டாகிறது.

पुत्रात् सद्गतिरिति चेत्तदपि प्रायोऽस्ति युक्त्यसहम् ।
इत्थं शरीरकष्टैर्दुःखं संप्रार्थ्यते मूढैः ॥ ४२

ஆகையால், புதல்வனால் நற்கதியுண்டாகிறது என்ற வசனமிருந்தாலும் நன்கு சர்ச்சை செய்யும்போது அது யுக்திக்கு நிலைக்கிறதில்லை. இப்படியிருக்கையில் ஆத்மஞானத்தைப் பெறாத மூடர்கள் மற்ற சுகங்களை விரும்பி சரீரத்திற்கு கஷ்டத்தையுண்டுசெய்துகொண்டு துக்கத்தையே தான் விரும்புகிறார்கள் (அவை நிலையான சுகமன்று).

पितृमातृबन्धुभगिनीपितृव्यजामातृमुख्यानाम् ।
मार्गस्थानामिव युतिरनेकयोनिभ्रमात् क्षणिका ॥ ४३

உலகில் பிரயாணம் செய்யும்பொழுது ஆங்காங்கு நிகழும் நண்பர்களின் சந்திப்புப்போல், அநேக பிறவிகளில் பிறப்பு, வளர்ப்பு, இறப்பு ஆகிய உலகஸஞ்சாரம் செய்கின்ற ஜீவாத்மாக்களுக்கு தந்தை, தாய், தமர்கள், சகோதரி, தந்தையின் சகோதரன், மருமகன் முதலானவர்களுடைய சகவாசம் சிறிது காலம்வரையில்தான் நிலவுகின்றது.

दैवं यावद्विपुलं यावत्प्रचुरः परोपकारश्च ।
तावत्सर्वे सुहृदो व्यत्ययतः शत्रवः सर्वे ॥ ४४

அதிருஷ்டம் அனுகூலமாகவிருக்குமளவும், பிறருக்கு அதிகமான உபகாரஞ்செய்யும் காலமளவும்தான் எல்லோரும் நண்பர்களாக இருப்பார்கள். அதற்கு மாறாக இருந்தால் எல்லோரும் பகைவர்களாக மாறுகிறார்கள்.

अश्नन्ति चेदनुदिनं बन्दिन इव वर्णयन्ति संतृप्ताः ।
तच्चेद् द्वित्रिदिनान्तरमभिनन्दन्तः प्रकुप्यन्ति ॥ ४५

ஒருவன் அளிக்கும் உணவை தினந்தோறும் உண்கிறார்களேயானால், அதனால் சந்தோஷமடைந்தவர்களாக வந்திகள் (ஸ்துதிபாடகர்கள்) போல உணவளித்தவனைப் புகழ்கிறார்கள். அப்படியுணவளித்தல் இரண்டு மூன்று நாட்களில் நின்றுவிட்டால் புகழ்ந்தவர்களே கோபமடைகிறார்கள்.

दुर्भरजठरनिमित्तं समुपार्जयितुं प्रवर्तते चित्तम् ।
लक्षावधि बहु वित्तं तथाऽप्यलभ्यं कपर्दिकामात्रम् ॥ ४६

நிரப்பித் திருப்திசெய்யமுடியாத வயிற்றின் காரணமாக மனம் லக்ஷக்கணக்காய் ஏராளமான செல்வத்தைச்

சம்பாதனை செய்ய முயலுகின்றது. ஆனால் ஒரு சோழி (சிறு மதிப்புள்ள நாணயம்) கூட கிடைப்பதில்லை.

लब्धश्चेदधिकोऽर्थः पत्न्यादीनां भवेत्स्वार्थः ।
नृपचोरतोऽप्यनर्थस्तस्माद् द्रव्योद्यमो व्यर्थः ॥ ४७

(நல்ல அதிருஷ்டத்தினால்) செல்வம் ஏராளமாகக் கிடைத்துவிட்டால், அப்பொழுது அது மனைவி, மக்கள் முதலியவர்களுடையதாக ஆகிவிடுகிறது. மேலும், செல்வம் ஏராளமாகவிருந்தால், அரசர்கள், திருடர்கள் முதலானவர்கள் மூலமாகவும் அனர்த்தம் உண்டாகிறது. ஆகையால், செல்வத்திற்காக முயற்சி பிரயோஜனமற்றது.

अन्यायमर्थभाजं पश्यति भूपोऽध्वगामिनं चौरः ।
पिशुनो व्यसनप्राप्तिं दायादानां गणः कलहम् ॥ ४८

செல்வமுள்ளவன் நியாயநெறியிலில்லாமலிருந்தால் அரசன் அவனுடைய செல்வத்தில் (கவர்ந்துகொள்ள) கவனம் செலுத்துகிறான். வழியில் நடக்கும்போது திருடன் அவனைத் துன்பப்படுத்துகிறான். கோட்சொல்லுகிறவன் அந்தப் பணக்காரனுக்கு ஆபத்தைச் செய்ய விரும்புகிறான். தாயாதிகளின் கூட்டம் கலகத்தை விளைவிக்க விரும்புகிறார்கள்.

पातकभरैरनेकैरर्थं समुपार्जयन्ति राजानः ।
अश्वमतङ्गजहेतोः प्रतिक्षणं नाश्यते सोऽर्थः ॥ ४९

அரசர்கள் எண்ணில்லாத் தீச்செயல்களால் செல்வத்தைச் சம்பாதனை செய்கிறார்கள். குதிரைகள், யானைகள் முதலியவைகளின் காரணமாக அச்செல்வம் நாசம் செய்யப்படுகிறது.

राज्यान्तराभिगमनाद्रणभङ्गान्मन्त्रिभृत्यदोषाद्वा ।
विषशस्त्रगुप्तघातान्मग्नाश्चिन्तार्णवे भूपाः ॥ ५०

(மேலும்) அரசர்கள் தங்களுடைய இராஜ்யங்களை இழத்தல், போரில் தோல்வியுறுதல், மந்திரிகள், மற்றும் சேவகர்கள் முதலானவர்களால் உண்டாகும் தோஷங்கள், விஷம், கத்தி முதலியவைகளால் இரகசியமாகக் கொலையுண்டாகுதல் ஆகியவற்றினுல் எய்தும் பல கவலைக்கடலில ஆழ்ந்து கிடக்கிறார்கள்.

## ३. मनोनिन्दाप्रकरणम्

हसति कदाचिद्रौति भ्रान्तं सदश दिशो भ्रमति ।
हृष्टं कदाऽपि रुष्टं शिष्टं दुष्टं च निन्दति स्तौति ॥ ५१

किमपि द्वेष्टि सरोषं ह्यात्मानं श्लाघते कदाचिदपि ।
चित्तं पिशाचमभवद्राक्षस्या तृष्णया व्याप्तम् ॥ ५२

மனநிந்தைப்பிரகரணம்.

பேராசையாகிய அரக்கியால் வியாபிக்கப்பெற்றதாக மனம் சிலசமயத்தில் சிரிக்கிறது, அழுகிறது, பிரமைகொண்டதாகப் பத்து திசைகளிலும் அலைகின்றது. சில சமயத்தில் சந்தோஷமுள்ளதாகவும், கோபமுள்ளதாகவும், நல்ல சுபாவமுள்ளதாகவும், துஷ்டசுபாவமுள்ளதாகவும் சிலவற்றை நிந்திக்கிறது, புகழ்கிறது, கோபமுள்ளதாகச் சில பொருள்களை வெறுக்கிறது, சில சமயத்தில் தற்புகழ்ச்சி செய்து கொள்ளுகிறது. இவ்வாறு பிசாசத்தன்மையுள்ளதாக இருக்கிறது.

दम्भाभिमानलोभैः कामक्रोधोरुमत्सरैश्चेतः ।
आकृष्यते समन्ताच्छ्वभिरिव पतितास्थिवन्मार्गे ॥ ५३

வழியில் கிடக்கின்ற எலும்புத்துண்டு நாய்களால் இழுக்கப்படுவதுபோல இந்த மனம ஆடம்பரத்தாலும், நான் என்ற செருக்கினுலும், பேராசையாலும், காமம், வெகுளி, பகை முதலிய துர்க்குணங்களாலும அங்குமிங்கும் இழுக்கப்படுகிறது.

तस्माच्छुद्धविरागो मनोऽभिलषितं त्यजेदर्थम् ।
तदनभिलषितं कुर्यान्निर्व्यापारं ततो भवति ॥ ५४

ஆகையால் தூய வைராக்கியத்தைக்கொண்டவனுய் மனம் விரும்பும் பொருளை விலக்கவேண்டும். அவ்வாறு விலக்கி விருப்பமற்றதாகச்செய்தால் அந்த மனம் செயலற்றதாக விளங்குகிறது.

---

## ४. विषयनिग्रहप्रकरणम्

संसृतिपारावारे ह्यगाधविषयोदकेन सम्पूर्णे ।
नृशरीरमम्बुतरणं कर्मसमीरैरितस्ततश्चलति ॥ ५५

விஷயநிக்கிரஹப்பிரகரணம்.

எண்ணில்லாத பற்பல விஷயத்தொகுதியாகிய தண்ணீர் நிறைந்து மிகவும் ஆழமுள்ள ஸம்ஸாரமாகிய கடலைத் தாண்டுவதற்கு மானிடப்பிறவியில் தோன்றிய இந்த உடலாகிய ஓடம முன்ஜன்மவினைகளாகிய அனுகூலமான காற்றினுல் சென்றுகொண்டிருக்கிறது.

छिद्रैर्नवभिरुपेतं जीवो नौकापतिर्महानलसः ।
छिद्राणामनिरोधाज्जलपरिपूर्णं पतत्यधः सततम् ॥ ५६

இந்த சரீரமாகிய ஓடம் ஒன்பது துவாரங்கள் உள்ளதாக இருக்கின்றது. ஜீவன் ஒரு சோம்பேரி ஓடக்காரன். (அவன் பெரிய சோம்பேரியாக இருக்கிறான்). துவாரம் வழியாகத் தண்ணீர் உட்புகுந்து ஓடம் நிறைந்தால் அது ஜலத்திற்குள் மூழ்கிவிடுகிறது. தண்ணீர் நிறையாமல் கவனிப்பது ஓடக்காரனுடைய கடமையன்றோ! அதுபோல் ஜீவன் மிகவும் ஜாக்கிரதையுள்ளவனாக பொறிகளை புலன்களின் வழியாக விஷயங்களில் ஈடுபடாமல் கட்டுப்பாடு செய்ய வேண்டும். அப்படிச் செய்யாவிடில் அவன் சோம்பேரியான ஓடக்காரனுக்கு நிகராவான்.

छिद्राणां तु निरोधात् सुखेन पारं परं याति ।
तस्मादिन्द्रियनिग्रहमृते न कश्चित्तरत्यनृतम् ॥ ५७

துவாரங்களை மூடினால் ஓடம் சிரமமில்லாமல் மறுகரையை அடைகின்றது. அதுபோலவே அழியக்கூடியதாயினும் இந்த ஸம்ஸாரமாகிய கடலைத் தாண்டுதல் பொறிகளின் அடக்கமின்றி நிகழாது.

पश्यति परस्य युवतिं सकाममपि तन्मनोरथं कुरुते ।
ज्ञात्वैव तदप्राप्तिं व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥ ५८

மனிதன் பிறனுடைய மனைவியைப் பார்க்கிறான். அவளை அடைவதற்கு விருப்பத்தையும் கொள்கிறான். அடைய முடியாது என்று அறிந்தும் வீணாகத் தீய எண்ணத்தினால் பாபத்தையே சம்பாதித்தவனாக ஆகிறான்.

पिशुनैः प्रकाममुदितां परस्य निन्दां शृणोति कर्णाभ्याम् ।
तेन परः किं म्रियते व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥

கோட்சொல்லுகிறவர்களால் மிகவும் சந்தோஷத்துடன் கூறப்படும் பிறருடைய நிந்தையை மகிழ்ச்சியுடன் செ

விகளால் கேட்கிறான். அப்படிக் கேட்பதால் பிறனுக்கு மரணம் உண்டாகிறதா? இல்லை. அந்த நிந்தையைக் கேட்பதினாலுண்டாகிற பாபத்தை மாத்திரமடைந்தவனாக ஆகிறான்.

अनृतं परापवादं रसना वदति प्रतिक्षणं तेन ।
परहानिर्लब्धा का व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥ ६०

மனிதன் ஒவ்வொரு க்ஷணமும் பொய்யையும், பிறருடைய நிந்தனையையும் நாவினால் கூறுகிறான். அதனால் பிறனுக்கு என்ன தீமை உண்டாகிறது? யாதொன்றுமில்லை. அப்படிச் சொல்லுகிறவன் பாபத்தைச் சம்பாதித்துக்கொள்ளுகிறானேயல்லாமல் வேறு ஒரு பயனும் அடைவதில்லை.

विषयेन्द्रिययोर्योगे निमेषसमयेन यत्सुखं भवति ।
विषये नष्टे दुःखं यावज्जीवं च तत्तयोर्मध्ये ॥ ६१

हेयमुपादेयं वा प्रविचार्य सुनिश्चितं तस्मात् ।
अल्पसुखस्य त्यागादनल्पदुःखं जहाति सुधीः ॥ ६२

புலப்படும் பொருள்களுக்குப் பொறிகளுடன் சம்பந்தம் நிலவுவதால் நிகழும் சுகம் சிறிதுநேரம் இருக்கின்றது. அந்தப் பொருள் நாசமடையும்போது அந்த சுகமும் நாசமடைகிறது. அதனால் உண்டாகிற துக்கம் வாழ்க்கைக்காலம் முழுவதும் நீடிக்கின்றது. ஆகையால் அற்ப சுகத்தில் விருப்பு, வெறுப்பு இவைகளில் யாது ஏற்கத்தக்கது யாது விலக்கத்தக்கது என்பதை நன்கு தீர்மானம் செய்து புத்திமானாகிய மனிதன் அற்பசுகத்தை விலக்கிவிடுவதனால் நீண்ட துக்கத்தையே அகற்றிவிடுகிறான்

धीवरदत्तमहामिषमश्नन् वैसारिणो म्रियते ।
तद्वद्विषयान् भुञ्जन् कालाकृष्टो नरः पतति ॥ ३६

செம்படவனால் வைக்கப்பட்ட மாமிசத்தை ஆகாரமாக உட்கொண்டு (பிறகு அவனால் பிடிக்கப்பட்டு) மீன் உயிரை இழக்கின்றது. அதுபோலவே, காலத்தினால் இழுக்கப்பட்டவனாக மனிதன் சிற்றின்பங்களை அனுபவிக்கையில் வீழ்கிறான். (உயர்ந்த சுகத்தை அடைவதற்குத் தகுதியற்றவனாகிறான்.

उरगग्रस्तार्धतनुर्भेकोऽश्नातीह मक्षिकाः शतशः ।
एवं गतायुरपि सन्विषयान् समुपार्जयत्यन्धः ॥ ६४

இவ்வுலகில் பாம்பினால் பிடிக்கப்பட்ட தவளை தனது பாதி உடல் பாம்பின் வாயிலிருக்கையில் தனக்கெதிரில் பறக்கின்ற ஈக்களை நூற்றுக்கணக்காக தின்கின்றது. அதுபோல் வாழும் நாட்கள் சென்றுகொண்டிருக்கையில் யமனுடைய வாயில் தான் பாதி சிக்கிக்கொண்டிருந்தபோதிலும் அறிவற்றவனான மனிதன் விஷயசுகங்களையே நாடுகின்றான்.

## ५. मनोनिग्रहप्रकरणम्

स्वीयोद्गमतोयवहा सागरमुपयाति नीचमार्गेण ।
सा चेदुद्गम एव स्थिरा सती किं न याति वार्धित्वम् ॥

மனதைக் கட்டுப்படுத்துதலைக் கூறும் பிரகரணம்.

ஒரு நதி தான் உற்பத்தியாகுமிடத்திலிருந்துப் பெருகிப் பள்ளத்தாக்கின் வழியாகச் சென்று சமுத்திரத்தை அடைகின்றது. அந்த நதி உண்டாகும் இடத்திலேயே நிலைபெற்று நீடித்திருந்தால் அதுவே சமுத்திரத்தன்மையை ஏன் அடையாது?

एवं मनः स्वहेतुं विचारयत्सुस्थिरं भवेदन्तः ।
न बहिर्वोदेति तदा किं नात्मत्वं स्वयं याति ॥ ६६

இவ்வாறு மனம் தன்னுடைய காரணத்தை நன்கு விசாரணை செய்துகொண்டு உட்பக்கத்திலிருந்து வெளியே செல்லாமலிருந்தால் (தன் தோற்றத்திற்குக் காரணமாகிய ஆத்மாவிருக்கும் இடத்திலேயே இருந்தால்) தானே அந்த ஆத்மத்தன்மையை ஏன் அடையமுடியாது?

वर्षास्वम्भःप्रचयात् कूपे गुरुनिर्झरे पयः क्षारम् ।
ग्रीष्मेणैव तु शुष्के माधुर्यं भजति तत्राम्भः ॥ ६७

மழைகாலத்தில் கிணற்றில் ஊற்று அதிகமிருப்பதால் தண்ணீர் உவர்ப்பாக இருக்கின்றது. கோடைகாலத்தில் வெய்யில் காய்வதினால் அந்தத் தண்ணீர் குறையக்குறைய இனிப்புச்சுவையையடைகின்றது.

तद्वद्विषयोद्रिक्तं तमःप्रधानं मनः कलुषम् ।
तस्मिन्विरागशुष्के शनकैराविर्भवेत्सत्वम् ॥ ६८

அதுபோல் விஷயங்களில் ஈடுபடுவதினால் மனம் பற்பல விருப்பங்கள் நிறைந்ததாகி தமோகுணத்தையே முக்கியமாகக்கொண்டதாகிறது. அதனால் அந்த மனம் சுத்தமற்றதாகிறது. அப்படிப்பட்ட மனம் வைராக்கியத்தையடைந்து ஸங்கற்பங்கள் குறைந்து குன்றிவிட்டால் தமோகுணமும் ரஜோகுணமும் நீங்கிவிடுகின்றன. ஸத்வகுணம் உதயமாகிறது.

यं विषयमपि लषित्वा धावति बाह्येन्द्रियद्वारा ।
तस्याप्राप्तौ खिद्यति तथा यथा स्वं गतं किंचित् ॥ ६९

எந்த விஷயத்தை விரும்பி வெளிப்பொறியின் வழியாக மனம் வெளியே செல்லுகின்றதோ அந்தப் பொருள் கிட்டா

விடில் தன்னுடைய செல்வத்தை இழத்தல் போன்று வருந்துகிறது. (இழந்த செல்வம் சிறிதாயினும் வருத்தம் அதிகம்). மனமும் அதுபோலவே கிட்டாத பொருளில் வருத்தமடைகிறது.

नगनगरदुर्गदुर्गमसरितः परितः परिभ्रमच्चेतः ।
यदि नो लभते विषयं विषयन्त्रितमिव खिन्नमायाति ॥

மலை, நாடு, காடு, மற்றும் புகமுடியாத ஆறுகள் ஆகிய இடங்களில் மனது பொருளைநாடிச் செல்கிறது. அந்தப் பொருள் கிட்டாவிட்டால் விஷத்தினால் பூசப்பெற்றதுபோல் வருந்தியதாகவே திரும்பிவருகிறது.

तुम्बीफलं जलान्तर्बलादधः क्षिप्तमप्युपैत्यूर्ध्वम् ।
तद्वन्मनः स्वरूपे निहितं यत्नाद्बहिर्याति ॥ ७१

உலர்ந்த சுரை தண்ணீருக்குள் பலமாக எறியப்பட்டாலும் விரைவில் மிதந்து மேலே வந்துவிடுகிறது. அதுபோல் மனம் பரம்பொருளாகிய பரமாத்மாவிடத்தில் நிலைக்கும்படி செய்யப்பட்டபோதிலும் முயற்சியுடன் அதிலிருந்து வெளியே வந்துவிடுகிறது.

इह वा पूर्वभवे वा स्वकर्मणैवार्जितं फलं यद्यत् ।
शुभमशुभं वा तत्तद्भोगोऽप्यप्रार्थितो भवति ॥ ७२

இப்பிறவியிலோ முற்பிறவியிலோ செய்யப்பட்டுள்ள வினையின் பயனாக சுகம் அல்லது துக்கம் நாம் விரும்பாவிட்டாலும் அதனதனனுபவமும் நேரிடுகிறது.

चेतःपशुमशुभपथं प्रधावमानं निराकर्तुम् ।
वैराग्यमेकमुचितं गलकाष्ठं निर्मितं धात्रा ॥ ७३

தீயநெறியில் விரைவாகச் செல்லும் தன்மையுள்ள மனமாகிய பசுவைக் கட்டி இழுத்து நல்லநெறியில் (ஆத்மஞா

னத்தில்) கொண்டுவருவதற்காக வைராக்கியமென்கிற கழுத்துக்கப்பு பிரம்மதேவனால் நியமிக்கப்பட்டுள்ளது.

निद्रावसरे यत्सुखमेतत्किं विषयजं यस्मात् ।
न हि चेन्द्रियप्रदेशावस्थानं चेतसो निद्रा ॥ ७४

தூங்குங்காலத்தில் நிலவுகின்ற ஆனந்தம் பொருள்களின் சம்பந்தத்தினாலுண்டானதா? இல்லை. ஏனெனில், மனதிற்கும் பொறிகளுக்கும் சம்பந்தம் உண்டாகும் நிலைமை துயிலாகாது. (பேரானந்தமாகிய முக்திசுகம் உண்டு என்பதற்கும், விஷயங்களுடைய சம்பந்தமில்லாமலேயே அது இருக்கிறது என்பதற்கும் துயிலானந்தம் உதாரணமாகும். துயிலானந்தம் மிகச் சிறிதுகாலம்தான் இருக்கின்றது. அதில் அஞ்ஞானத்தினுடைய சம்பந்தமுமுண்டு. ஆனால் பேரானந்தம் அஞ்ஞானத்தின் சம்பந்தமின்றியும் அழிவில்லாமல் நீண்டகாலம் நிலையுள்ளதுமானது என்பது வேதாந்தூரின் கொள்கை).

अद्वारतुङ्गकुड्ये गृहेऽवरुद्धो यथा व्याघ्रः ।
बहुनिर्गमप्रयत्नैः श्रान्तस्तिष्ठति पतञ्श्वसंश्च तथा ॥ ७५

सर्वेन्द्रियावरोधादुद्योगशतैरनिर्गमं वीक्ष्य ।
शान्तं तिष्ठति चेतो निरुद्यमत्वं तदा याति ॥ ७६

போக்குவரவிற்குரிய வாயிலில்லாமல் மிக உயர்ந்த மதிற்சுவர் சுற்றிலுமுள்ள ஒரு இடத்தில் புலியொன்று அடைக்கப்பட்டால் அது தன்னுடைய முயற்சிகளனைவற்றினாலும் வெளியே செல்ல முடியாமல் கடைசியில் ஓய்வுற்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு அந்த மதிலுக்குள்ளேயே அமைதியாக இருந்துவிடுகிறது. அதுபோல், ஐம்பொறிகளை அடக்

குவதினால் வெளியே செல்ல வழியின்மையைக் கண்டு செயல் குன்றினமையால் மனம் அமைதியாக தன்னிடத்திலேயே அசையா நிலைமையை அடைகிறது.

प्राणस्पन्दनिरोधात् सत्सङ्गाद्वासनात्यागात् ।
हरिचरणभक्तियोगान्मनः स्ववेगं जहाति शनैः ॥ ७७

பிராணவாயுவைத் தடை செய்வதாலும், சான்றோர்களின் ஸகவாஸத்தினாலும், விஷயவாசனைகளையும், ஸங்கற்பங்களையும் குறைத்துக்கொள்வதினாலும், ஹரியின் பாதாரவிந்தங்களில் பக்திசெய்வதினாலும் காலக்கிரமத்தில் மனம் தன்னுடைய தீயவேகத்தை இழந்துவிடுகிறது.

## ६. वैराग्यप्रकरणम्

परगृहगृहिणीपुत्रद्रविणानामागमे विनाशे वा ।
कथितौ हर्षविषादौ किं वा स्यातां क्षणं स्थातुः ॥ ७८

வைராக்கியப் பிரகரணம்.

மற்றவனுடைய இல்லத்தில் விருந்தினனாக சிறிதுநேரம் இருக்கையில் அங்குள்ள இல்லாள், புதல்வன், செல்வம் ஆகியவற்றின் மேன்மையோ குறைவோ உண்டானால் அதனாலுண்டாகக்கூடிய சந்தோஷமோ துக்கமோ அந்த விருந்தினனுக்கு ஏற்படுமா? இல்லை.

दैवात्स्थितं गतं वा यं कञ्चिद्विषयमीड्यमल्पं वा ।
नो तुष्यन्न च सीदन्वीक्ष्य गृहेष्वतिथिवन्निवसेत् ॥ ७९

அதுபோலவே இல்லறம் நடத்துகின்ற புத்திமானாகிய அறிஞன், விருந்தினனைப்போல தன்னுடைய இல்லத்திலிருக்கையில் தெய்வச்செயலாக நிகழும் நன்மைதீமைகளா

லும் இருக்கும் பொருள் அதிகமாயினும் சிறிதாயினும் அதனுடைய நிலையினாலும் நாசத்தினாலும் அதிக சந்தோஷத்தையும் வருத்தத்தையும் அடைவதில்லை.

ममताभिमानशून्यो विषयेषु पराङ्मुखः पुरुषः ।
तिष्ठन्नपि निजसदने न बाध्यते कर्मभिः क्वापि ॥ ८०

இவ்வாறு 'நான்' என்றும் 'என்னுடையது' என்றும் அபிமானமில்லாமலும் இன்பதுன்பங்களில் விருப்பு-வெறுப்பில்லாமலும் தன்னில்லத்தில் வாசஞ்செய்வானாகில் அவன் ஒருகாலத்திலும் கர்மங்களுக்குக் கட்டுப்பட்டவனாவ

कुत्राप्यरण्यदेशे सुनीलतृणवालुकोपचिते ।
शीतलतरुतलभूमौ सुखं शयानस्य पुरुषस्य ॥ ८१

तरवः पत्रफलाढ्याः सुगन्धिशीतानिलाः परितः ।
कलकूजितवरविहगाः सरितो मित्राणि किं न स्युः ॥ ८२

மேற்கூறிய நிலைமையை ஒருவன் அடைந்தால் பசுமையான புற்களும் மணலும் நிரம்பிய வனத்தில் குளிர்ந்த மரச்சோலையில் துயிலானந்தத்தை அனுபவிக்கும் அந்தப் புருஷனுக்கு நன்கு தழைத்து பழங்கள் நிரம்பியவைகளாகவும், பரிமளவாசனையுள்ள குளிர்ந்த காற்றுடன் கூடியவைகளாகவும் இனிமையாகக் கூவுகின்ற பறவைகளுடன் கூடியவைகளாகவுமிருக்கின்ற மரங்களும் ஆறுகளும் இயற்கை நண்பர்களாக இருப்பதில்லையா? (தன்னிடத்திற்கு வந்த விருந்தினனுக்கு காய், கனி, பழங்களளித்தல், களைப்புநீக்கல், இன்சொல் கூறல், ஜலமளித்தல் முதலிய உபசாரங்கள் ஆறுகளாலும் மரங்களாலும் நிகழ்கின்றன).

वैराग्यभाग्यभाजः प्रसन्नमनसो निराशस्य ।
अप्रार्थितफलभोक्तुः पुंसो जन्मनि कृतार्थतेह स्यात् ॥ ८३

வைராக்கியமாகிய பெரும்பாக்கியத்தை அடைந்தவனும், மிகத் தூயமனமுடையவனும், எதிர்பார்க்காமலே நிகழ்கின்ற இன்பதுன்பங்களை மனமாறுபாடு இல்லாமல் அனுபவிக்கின்றவனுமாகிய மனிதனுடைய வாழ்க்கை இகத்திலேயே பயனுள்ளது.

द्रव्यं पल्लवतश्च्युतं यदि भवेत्क्वापि प्रमादात्तदा
शोकायाथ तदर्पितं श्रुतवते तोषाय च श्रेयसे ।
स्वातन्त्र्याद्विषयाः प्रयान्ति यदमी शोकाय ते स्युश्चिरं
संत्यक्ताः स्वयमेव चेत्सुखमयं निःश्रेयसं तन्वते ॥ ८४

மரம் காய்த்துக் கனிந்து அந்தக்காய் காம்பிலிருந்து தானாகவே கீழே விழுந்து உடையவனுக்குக் கிட்டாவிடில் மனம் வருந்துகிறது. அந்தப் பழத்தை தான் அடைந்து நன்கு கற்றுணர்ந்த சிறந்த மனிதனுக்குக் கொடுத்துவிட்டால் அதனால் தனக்குச் சந்தோஷமும் உண்டாகிறது. கொடைக்குத்தக்க பயனும் உண்டு. ஆகவே மேற்கூறியபடி விஷயங்கள் தன்னைவிட்டு விலகியபோதிலும், நம் கையில் கிடைக்காமல் அவைகளாக விலகிவிட்டால் வெகுகாலம் துக்கத்திற்கு காரணமாகின்றன. அவைகளை நாம் தியாகம் செய்தால் சந்தோஷத்தையும் சுகத்தையும் வளர்க்கின்றன.

विस्मृत्यात्मनिवासमुत्कटभवाटव्यां चिरं पर्यटन्
संतापत्रयदीर्घदावदहनज्वालावलीव्याकुलः ।
वल्गन् फल्गुषु सुप्रदीप्तनयनश्चेतःकुरङ्गो बला-
दाशापाशवशीकृतोऽपि विषयव्याघ्रैर्मृषा हन्यते ॥ ८५

ஒரு மான் தன்னுடைய தங்குமிடத்தை மறந்து பெரிய காட்டில் அலைந்துகொண்டிருக்கிறது. அது போகும்வழியில் காட்டுத்தீ கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருக்கிறது. தெய்வச்செயலால் அதிலிருந்து தப்பித்துக்கொண்டு ஆகாரத்தைத் தேடிக்கொண்டு செல்லுகையில் வேடர்களின் வலையில் சிக்கிக்கொள்ளுகிறது, தனது முயற்சியால் அதிலிருந்தும் தப்பித்துக்கொண்டு நடந்துசெல்லுகையில் புலிகளால் பிடிக்கப்பட்டு அநியாயமாகக் கொல்லப்படுகிறது. இந்த உபமானத்தைக்கொண்டு மனதை மானாக உருவகப்படுத்திக் கூறுகின்றார்:—

மனமாகிய மான் தான் உறையுமிடமாகிய இதயத்தில் இருக்கும் ஆத்மாவை மறந்து ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் ஆகிய மூன்று விதங்களான தாபங்களாகிய காட்டுத்தீயின் சுடர்கள் தனக்குச் சுற்றிலும் எரிந்தபோதிலும் தெய்வாதீனமாக அதிலிருந்து தப்பித்துக்கொள்கிறது. அற்பப்பயன்களில் ஆசைகொள்ளுகிறபடியால் வேடர்களின் வலைபோன்ற பேராசையினால் இழுக்கப்படுகிறது. ஆயினும் சிறிய அறிவினால் அதில் ஈடுபடாமலிருப்பதற்கு முயற்சிக்கின்றது. விவேகத்திற்குவேண்டிய அளவு சக்தியில்லாமையினால் விஷயங்களாகிய புலிகளினால் கொல்லப்படுகிறது. (இழுக்கப்படுகிறது.)

---

## ७. आत्मसिद्धिप्रकरणम्

उत्पन्नेऽपि विरागे विना प्रबोधं सुखं न स्यात् ।
न भवेद्गुरूपदेशात्तस्माद्गुरुमाश्रयेत् प्रथमम् ॥ ८६

ஆத்மா உண்டு என்று நிரூபணம் செய்யும் பிரகரணம்.

வைராக்கியம் ஏற்பட்டபோதிலும் ஆத்மஞானம் உண்டாகாவிடில் மோக்ஷசுகம் கிட்டாது. அந்த ஆத்மஞானம்

குருவினுடைய உபதேசத்தால் உண்டாகவேண்டும். ஆத லால் முதலில் குருவையடையவேண்டும்.

यद्यपि जलधेरुदकं यद्यपि वा प्रेरकोऽनिलस्तत्र ।
तदपि पिपासाकुलितः प्रतीक्षते चातको मेघम् ॥ ८७

மேகம் சமுத்திரத்திலிருந்து நீரைப் பெற்றுக்கொள் ளுகிறது. அந்த நீர் மழையாக கீழே விழுகிறது. அதற்குக் காற்று தூண்டுகோலாகவிருக்கிறது. இவ்வாறு சமுத்திர மும் காற்றும் மழைக்குக் காரணமாயினும் தாகத்தினால் வ ருந்திய சாதகப்பறவை நீரைக் குடிப்பதற்கு மேகத்தைத் தான் எதிர்பார்க்கின்றது.

त्रेधा प्रतीतिरुक्ता शास्त्राद्गुरुतस्तथाऽऽत्मनस्तत्र ।
शास्त्रप्रतीतिरादौ यद्वन्मधुरो गुडोऽस्तीति ॥ ८८

ஆத்மஞானம் ஏற்பட சாஸ்திரம், ஆசார்யர், தான் என மூன்று காரணங்கள் கூறப்படுகின்றன. "இனிப்பான வெல்லம் இருக்கிறது" என்ற சொல் முதலில் வெல்லத் தின் அறிவைப் புகட்டுவதுபோல் 'ஆத்மா இருக்கிறான்' என்று கூறும் சாஸ்திரம் (உபனிடதங்கள்) முதல்காரணம்.

अग्रे गुरुप्रतीतिर्दूराद्गुडदर्शनं यद्वत् ।
आत्मप्रतीतिरस्माद्गुडभक्षणजं सुखं यद्वत् ॥ ८९

வெல்லம் என்றபதார்த்தம் இருக்கிறது என்று அறிந்த பிறகு அது இருக்குமிடத்தையடைந்து அதைக் காண்பது போல் ஆத்மவஸ்துவை உபதேசிக்க வல்லமையுள்ள ஆசிரி யர் எதிரிலிருப்பதையறிந்து அவருடைய உபதேசத்தை யுணர்தலும் இன்றியமையாதது. ஆகையால் ஆசிரியர் இ ரண்டாவது காரணம். வெல்லத்தைப் பார்த்து சாப்பிட்டுச்

சுவை அறிந்துகொள்ளுவதுபோல் ஆசிரியருடைய உபதேசத்தை அனுசந்தானம் செய்து பிரத்தியக்ஷமாகத் தெரிந்துகொள்ளுவதற்கு தானும் காரணம.

रसगन्धरूपशब्दस्पर्शा अन्ये पदार्थाश्च ।
कस्मादनुभूयन्ते नो देहान्नेन्द्रियग्रामात् ॥ १०

சுவை, வாசனை (ஒளி), உருவம், ஓசை, ஸ்பர்சம (ஊறு) ஆகிய புலன்களின் விஷயங்களும் மற்ற பதார்த்தங்களும் அறியப்படுவது தேகத்தினுலுமல்ல, கேவலம் பொறிகளாலுமல்ல.

मृतदेहेन्द्रियवर्गो यतो न जानाति दाहजं दुःखम् ।
प्राणश्चेन्निद्रायां तस्करबाधां स किं वेत्ति ॥ ११

பிராணன் நீங்கிய பின் உடலாவது இந்திரியங்களாவது நெருப்பினுல் உண்டாகிற எரிச்சலை அறிகிறதில்லை. பிராணன் உணரும் சக்தியுள்ளது என்று கூறுவதும் சரியன்று. துயிலுகையில் திருடர்களால் உண்டாகும் துன்பத்தை பிராணன் உணருகிறதா?

मनसो यदि वा विषयस्तद्युगपत्किं न जानाति ।
तस्य पराधीनत्वाद्यतः प्रमादस्य कस्त्राता ॥ १२

மனம் உணருகிறது என்றால் அதுவும் சரியன்று. ஏககாலத்தில் பற்பல புலன்களினுல் உண்டாகும் உணர்ச்சி நிகழுகிறதில்லை. மனம் எப்பொழுதுமிருக்கையால் ஏககாலத்தில் எல்லாவிஷயங்களின் அறிவு நிலவவேண்டுமல்லவா? ஏன் அப்படியில்லை? மனம் கவனமில்லாமல் இருக்கின்றது என்று கூறவேண்டும் அப்படி அந்த மனதின் கவனத்தைக் கட்டுப்படுத்தல் என்பது யாரால் அல்லது யாருடைய செயல்? (அதுதான் ஆத்மா).

गाढध्वान्तगृहान्ततः क्षितितले दीपं निधायोज्ज्वलं
पञ्चच्छिद्रमधोमुखं हि कलशं तस्योपरि स्थापयेत् ।
तद्बाह्ये परितोऽनुरन्ध्रममलां वीणां च कस्तूरिकां
सद्रत्नं व्यजनं न्यसेच्च कलशच्छिद्राध्वनिर्गच्छता ॥ १३

तेजोंशेन पृथक्पदार्थनिवहज्ञानं हि यज्जायते
तद्रन्ध्रैः कलशेन वा किमु मृदो भाण्डेन तैलेन वा ।
किं सूत्रेण न चैतदस्ति रुचिरं प्रत्यक्षबाधादतो
दीपज्योतिरिहैकमेव शरणं देहे तथाऽऽत्मा स्थितः ॥ १४

*வீட்டின் இருள் நிறைந்த ஒரு அறையில் தரையின் மீது ஒரு தீபத்தை நன்கு பொருத்தி அதை ஐந்து துவாரங்கள் கொண்ட ஒரு குடத்தினால் மூடிவைக்கவேண்டும். அந்தக் குடத்திலுள்ள ஒவ்வொரு துவாரத்திற்கும் நேராக எதிரில் ஒரு நெல்லிக்கனி, வீணை, கஸ்தூரி, உயர்ந்த இரத்தினம், விசறி என்ற ஐந்து பொருள்களையும் வைக்கவேண்டும். குடத்தின் துவாரமூலமாக மேற்கூறிய பொருள்களில் விழும ஒளியினால் அவைகளைத் தனித்தனியாக அறிந்து கொள்ளுகிறோமல்லவா? அது எதனால்? துவாரங்களாலா? குடத்தினாலா? உள்ளேயிருக்கும் தீபபாத்திரத்தினாலா? எண்ணெயினாலா? திரியினாலா? தீபஜ்வாலையாலா? என்பதுபற்றி ஆராய்ந்தால் தீபஜ்வாலையினாலேயே என்பது நிச்சயம். அதுபோல், பொறிகளையும், புலன்களையும், பொருள்களையும் விளங்கச்செய்வது சேதனனாகிய ஆத்மாதான் என்பதும் உறுதி.*

---

## ८. मायासिद्धिप्रकरणम्

चिन्मात्रः परमात्मा ह्यपश्यदात्मानमात्मतया ।
अभवत्सोऽहंनामा तस्मादासीद्भिदो मूलम् ॥ ९५

மாயை இருக்கிறது என்று கூறும் பிரகரணம்.

*அந்த சித்ரூபியான பரமாத்மா தன்னைத் தானாகவே (சிருஷ்டிக்கவேணும் என்ற ஸங்கல்பத்துடன்) பார்த்துக் கொள்ளுகிறார். அப்பொழுது அகங்காரம் உண்டாகிறது. அதுதான் வேற்றுமைக்குக் காரணம்.*

द्वेधैव भाति तस्मात्पतिश्च पत्नी च तौ भवेतां वै ।
तस्मादयमाकाशस्त्रियैव परिपूर्यते सततम् ॥ ९६

*உலகத்தை சிருஷ்டிக்கவேண்டுமென்ற ஸங்கல்பமுண்டானதினால் ஒரே உருவம் கணவன், மனைவி என்ற இரு உருவமாக மாறுகிறது. ஆகையால் ஆகாயரூபியான இந்த ஆத்மா பெண்ணினால்தான் எங்கும் வியாபித்ததாக தோன்றுகிறது.*

सोऽयमपीक्षांचक्रे ततो मनुष्या अजायन्त ।
इत्युपनिषदः प्राहुर्दयितां प्रति याज्ञवल्क्ययोक्त्या ॥ ९७

*உலகத்தையும் ஜீவாத்மாக்களையும் சிருஷ்டிக்கவேண்டும் என்று அந்த பரமாத்மா ஸங்கல்பம் கொண்டதினால் பிறகு மனிதர்கள் ஜனித்தனர். இவ்வாறு யாக்ஞவல்க்கிய முனிவர் தன்னுடைய மனைவிக்குக் கூறியதாக உபநிடதங்கள் உபதேசிக்கின்றன.*

चिरमानन्दानुभवात्सुषुप्तिरिव काऽप्यवस्थाऽभूत् ।
परमात्मनस्तु तस्मात्स्वप्नवदेवोत्थिता माया ॥ ९८

ஜீவனுக்குத் துயிலானந்தம் ஏற்படுவதுபோல் பரமாத்மனுக்கு ஸ்வரூபானந்தம் என்ற ஒரு நிலைமை உண்டு. அந்த ஆனந்தானுபவம் பிரமாணங்களால் விளக்கக்கூடியதன்று. ஜீவனுக்கு ஸ்வப்னவஸ்தை (கனவு) ஏற்படுவதுபோல் பரமாத்மனது ஸங்கற்பத்தினாலேயே சிருஷ்டிக்குக் காரணமாகிய மாயை கிளம்பிற்று.

सदसद्विलक्षणाऽसौ परमात्मसदाश्रयाऽनादिः ।
सा च गुणत्रयरूपा सूते सचराचरं विश्वम् ॥ ९९

அந்த மாயை ஸத்துமன்று; அஸத்துமன்று; ஸதஸத்விலக்ஷணம். பரமாத்மாவை ஆச்ரயித்துக்கொண்டுள்ளது. உற்பத்தியற்றது. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுள்ளது. அசைகின்றதும் அசைவற்றதுமாகிய பிராணிகளுடன் கூடிய உலகத்தை அந்த மாயை சிருஷ்டிக்கின்றது.

माया तावदहश्या दृश्यं कार्यं कथं जनयेत् ।
तन्तुभिरदृश्यरूपैः पटोऽत्र दृश्यः कथं भवति ॥ १००

[வஸ்திரத்திற்கு நூல் காரணம். வஸ்திரம் காரியம். காரணத்தினுடைய குணம் காரியத்தில் இருக்கவேண்டும் என்று நியாயம்]. நூல்களுக்கு உருவம் இல்லாமலும் அவை கண்ணுக்குத் தெரியாமலும் இருந்தால் அத்தகைய நூல்களால், கண்களால் காணப்படுகிற வஸ்திரம் உண்டாகாதல்லவா? (எப்படி உண்டாகும்?) அதுபோலவே கண்ணுக்குப் புலனாகாத மாயையினால் புலப்படுகிற உலகம் எவ்வாறு சிருஷ்டிக்கப்பட்டதாகும்? (என்று ஆக்ஷேபம்).

स्वप्ने सुरतानुभवाच्छुक्रद्रावो यथा शुभे वसने ।
अनृतं रतं प्रबोधे वसनोपहतिर्भवेत्सत्या ॥ १०१

स्वप्ने पुरुषः सत्यो योषिदसत्या तयोर्युतिश्च मृषा ।
शुक्रद्रावः सत्यस्तद्वत् प्रकृतेऽपि संभवति ॥ १०२

காரணத்தின் குணம் காரியத்தில் இருக்கவேண்டும் என்ற நியமம் இல்லை என்று ஆக்ஷேபத்திற்கு சமாதானம் கூறுகிறார்:—கனவில் ஸ்திரீயுடன் போகத்தை அனுபவித்ததினால் நல்ல வஸ்திரம் ரேதஸ்கலனத்தினால் கெட்டுவிடுகிறது. விழித்துக்கொள்ளுகையில் சுகம் பொய் என்று தெரிகிறது. ஆயினும் வஸ்திரம் கெட்டது உண்மை. கனவில் புருஷன் ஸத்தியம். காரணமாகிய பெண்ணும் அவளுடைய சம்பந்தமும் பொய். காரியமான ஸ்கலனம உண்மை.

[பொய்யான காரணத்தினால் உண்மையான பயன் உண்டாகிறது.]

एवमदृश्या माया तत्कार्यं जगदिदं दृश्यम् ।
माया तावदियं स्याद्या स्वविनाशेन हर्षदा भवति ॥ १०३

இவ்வாறு மாயை கண்களால் காணத்தகாதது. அதனுடைய காரியமாகிய பிரபஞ்சம பிரத்யக்ஷமானது. மேலும், எது, தான் நாசமடையும் காலத்தில் சந்தோஷத்தை அளிக்கின்றதோ, அது மாயை.

रजनीवातिदुरन्ता न लक्ष्यतेऽत्र स्वभावोऽस्याः ।
सौदामिनीव नश्यति मुनिभिः सम्प्रेक्ष्यमाणेव ॥ १०४

இரவுபோல் இருள் நிரம்பியது. சாதாரணமனிதர்களால் இதனுடைய சுபாவம் அறியமுடியாதது. முனிவர்களால் தமது தவத்தின் மஹிமையினால், ஞானக்கண்ணினால் பார்க்கப்படும் காலத்திலேயே மின்னல்போல் நாசமடைகின்றது.

माया ब्रह्मोपगताऽविद्या जीवाश्रया प्रोक्ता ।
चिदचिद्ग्रन्थिश्चेतस्तदक्षयं ज्ञेयमा मोक्षात् ॥ १०५

மாயை பிரம்மவஸ்துவை ஆச்ரயித்திருக்கின்றது. அவித்தை ஜீவனை ஆச்ரயித்துள்ளது. [விக்ஷேபசக்தியை முக்கியமாகக்கொண்டது மாயை, ஆவரணசக்தியை முக்கியமாகக்கொண்டது அவித்தை என்று வித்தியாஸம்.] ஜீவனுடைய 'சேதஸ்' என்ற மனம் சித்தினுடையவும் அசித்தான அவித்தையினுடையவும் இணைப்பினாலாகியது. ஜீவனுக்கு மோக்ஷம் என்ற பரமபுருஷார்த்தம் ஏற்படும்வரையில் அந்த சேதஸ் நாசமற்றதாகவிருக்கும்.

घटमठकुड्यैरावृतमाकाशं तत्तदाह्वयं भवति ।
तद्वदविद्यावृतमिह चैतन्यं जीव इत्युक्तः ॥ १०६

ஒரே ஆகாயம் குடம், மடம், சுவர் முதலியவைகளால் மறைக்கப்படுவதனால் கடாகாயம், மடாகாயம், குட்யாகாயம் என்ற பெயருள்ளதாகவிருக்கின்றது அதுபோல் அவித்தையினால் மறைக்கப்பட்ட ஒரே ஆத்மா ஜீவன் என்று கூறப்படுகிறது.

ननु कथमावरणं स्यादज्ञानं ब्रह्मणो विशुद्धस्य ।
सूर्यस्येव तमिस्रं रात्रिभवं स्वप्रकाशस्य ॥ १०७

சுத்தசேதனனான பரமாத்மாவிற்கு அஞ்ஞானத்தினால் ஆவரணம் (மறைவு) எவ்வாறு? தானாகவே விளங்குகின்ற சூரியனுக்கு இரவிலுள்ள இருள் எவ்வாறு மறைத்தலைச் செய்யமுடியும்? (என்று வினா ஏற்படுகிறது)

दिनकरकिरणोत्पन्नैर्मेघैराच्छाद्यते यथा सूर्यः ।
न खलु दिनस्य दिनत्वं तैर्विकृतैः सान्द्रसंघातैः ॥ १०८

(விடை கூறுகிறார்) சூரியனுடைய பிரகாசமுள்ள காலத்தை பகல் என்று கூறுகிறோம் சூரியனுடைய கிரணங்களே தண்ணீரை உட்கொள்ளுவதனால் மேகங்கள் ஆகின்றன அத்தகைய மேகங்களே சூரியனை நமக்குத் தென்படாமலிருக்கும்படி மறைக்கின்றன ஆயினும் சூரியனால் உண்டாகிற பகல்வேளையை அந்த மேகங்கள் மாற்றுகிறதில்லை.

अज्ञानेन तथाऽऽत्मा शुद्धोऽपि च्छाद्यते सुचिरम् ।
न परं तु लोकसिद्धा प्राणिषु तच्चेतनाशक्तिः ॥ १०९

அதுபோலவே சுத்த பரமாத்மவஸ்துவானது அஞ்ஞானத்தினால் மறைக்கப்படுகையில அதனுடைய தூய்மை மறைக்கப்பட்டபோதிலும் உலகிலுள்ள பிராணிகளில் பிரசித்தமான 'சைதன்யம்' என்ற அதனுடைய நிலைமை மறைக்கப்படுகிறதில்லை.

---

## ९. लिङ्गदेहादिनिरूपणप्रकरणम्

स्थूलशरीरस्यान्तर्लिङ्गशरीरं च तस्यान्तः ।
कारणमस्याप्यन्तस्ततो महाकारणं तुर्यम् ॥ ११०

லிங்கதேஹாதிநிரூபணப்பிரகரணம்.

ஸ்தூலசரீரத்திற்குள் லிங்கசரீரமும், அதற்குள் காரணசரீரமும், அதற்கும் மேலான மகாகாரணசரீரமும் ஆகிய நான்கு சரீரங்கள் ஜீவனுக்கு உள

स्थूलं निरूपितं प्रागधुना सूक्ष्मादितो ब्रूमः ।
अंगुष्ठमात्रः पुरुषः श्रुतिरिति यत्प्राह तत्सूक्ष्मम् ॥ १११

முன்னமேயே ஸ்தூலசரீரத்தைப்பற்றி நிரூபணம் செய்யப்பட்டது, இப்பொழுது லிங்கசரீரம் என்ற

ஸூக்ஷ்மசரீரம் முதலியவற்றைக் கூறுவோம். 'अङ्गुष्ठमात्रः पुरुषः' என்ற வேதவசனம் (ஜீவாத்மா கட்டைவிரல் அளவுள்ளவன்) எதைப்பற்றிக் கூறுகிறதோ, அது ஸூக்ஷ்மசரீரம்.

सूक्ष्माणि महाभूतान्यसवः पञ्चेन्द्रियाणि पञ्चैव ।
षोडशमन्तःकरणं तत्संघातो हि लिङ्गतनुः ॥ ११२

ஐந்து ஸூக்ஷ்மபூதங்களும், ஐந்து பிராணன்களும், ஐம்பொறிகளும், 16-வது மனம் ஆகியவைகளின் தொகுதி தான் ஸூக்ஷ்மசரீரம் அல்லது லிங்கசரீரம்.

तत्कारणं स्मृतं यत्तस्यान्तर्वासनाजालम् ।
तस्य प्रवृत्तिहेतुर्बुद्ध्याश्रयमत्र तुर्यं स्यात् ॥ ११३

அந்த லிங்கசரீரத்திற்குக் காரணம், வாசனுசரீரம். அனேக வினைகளின் வாசனைகள் [ஸம்ஸகாரங்கள்] கொண்டது. அந்த வாசனுசரீரமுண்டாவதற்குக் காரணம் ஆத்மாவிற்கும் புத்திக்குமுள்ள சம்பந்தமேயாகும். இது நான்-காவதாயினும் மற்ற எல்லா சரீரங்களுக்கும் மூலகாரணமாகையால் மகாகாரணம் எனப்படுகிறது.

तत्सारभूतबुद्धौ यत्प्रतिफलितं तु शुद्धचैतन्यम् ।
जीवः स उक्त आद्यैर्योऽहमिति स्फूर्तिकृद्वपुषि ॥ ११४

ஆகையால் முக்கியமான புத்தியில் பிரதிபலித்த சுத்த சைதன்யம் ஜீவாத்மா என்று முன்னேர்களால் கூறப்படுகிறது. அந்த ஜீவனுடைய சம்பந்தத்தினுல்தான் சரீரத்தில் நான் என்ற அபிமானம் விளங்குகிறது.

चरतरतरङ्गसङ्गात्प्रतिबिम्बं भास्करस्य च चलं स्यात् ।
अस्ति तथा चञ्चलता चैतन्ये चित्तचाञ्चल्यात् ॥ ११५

அசைகிற அலைகளுள்ள ஜலத்தில் பிரதிபிம்பிக்கின்ற சூரியன் சலனமுள்ளவனாகக் கூறப்படுவதுபோல் புத்தியில் பிரதிபலித்த சைதன்யம புத்தியினுடைய சலனத்தினால் சலனமுள்ளதாகக் கூறப்படுகிறது.

नन्वर्कप्रतिबिम्बः सलिलादिषु यः स चावभासयति ।
किमितरपदार्थनिवहं प्रतिबिम्बोऽप्यात्मनस्तद्वत् ॥ ११६

ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற சூரியன் பொருள்களை விளக்கிக் காட்டுகிறான். ஆனால் ஜலத்தில் பிரதிபலிக்கின்ற சூரியன் மற்ற பொருள்களை நன்றாகக் காண்பிப்பதில்லை யல்லவா? ஆகையால் ஜீவாத்மாவை அந்த உதாரணத்தைக் கொண்டு பிரதிபிம்பமாகக் கூறினால், அந்த ஜீவனுக்கு விளக்கும் சக்தி இல்லையென்றல்லவா கூறவேண்டும். அது சரியன்று [என்று ஆக்ஷேபம.]

प्रतिफलितं यत्तेजः सवितुः कांस्यादिपात्रेषु ।
तदनुप्रविष्टमन्तर्गृहमन्यानर्थान् प्रकाशयति ॥ ११७

[சமாதானம்] சூரியனுடைய ஒளி வெண்கலப்பாத்திரம் வெள்ளிப்பாத்திரம முதலியவற்றில் பிரதிபலித்து அந்த ஒளி வீட்டினுள்ள ஏனைய பொருள்களை விளக்குகின்றது.

चित्प्रतिबिम्बस्तद्वद्बुद्धिषु यो जीवतां प्राप्तः ।
नेत्रादीन्द्रियमार्गैर्बहिरर्थान्सोऽवभासयति ॥ ११८

அதுபோல் புத்தியில் பிரதிபலித்து ஜீவத்தன்மையை அடைந்த சேதனனும் கண் முதலான பொறிகள் வழியாக வெளியே உள்ள பதார்த்தங்களை விளக்குகிறான்.

---

# १०. अद्वैतप्रकरणम्

तदिदं य एवमार्यो वेद ब्रह्माहमस्मीति ।
स इदं सर्वं च स्यात्तस्य हि देवाश्च नेशते भूत्या ॥
येषां स भवत्यात्मा योऽन्यामथ देवतामुपास्ते यः ।
अहमन्योऽसावन्यश्चेत्थं यो वेद पशुवत्सः ॥ १२०
इत्युपनिषदामुक्तिस्तथा श्रुतिर्भगवदुक्तिश्च ।
ज्ञानी त्वात्मैवेयं मतिर्ममेत्यत्र युक्तिरपि ॥ १२१

அத்வைதப்பிரகரணம்.

ஆகையால் இந்த விஷயத்தை நன்கு அறிந்து எந்த மகான் "அஹம் பிரம்மாஸ்மி" (நான் பிரம்மமாகவிருக்கிறேன்) என்ற நிச்சயத்துடன் இருக்கிறானோ, அவன் பரமாத்மாவாகவிருப்பதுடன் இந்த உலகமனைத்தும் அவன் உருவமாகவே இருக்கின்றது. அவனுக்குக் தேவர்கள் கூடத் தங்களுடைய ஆற்றலினால் ஒருவிதமான இடையூறும் செய்யமுடியாது. ஏனெனில் அத்தகையவன் தேவர்களுக்கும் ஆத்மாவாகவே இருக்கிறான். நான் வேறு, அவன் வேறு என்ற வேற்றுமையுள்ள உபாஸகன் தேவர்களுக்குப் பசுவாக இருக்கிறான். இவ்வாறு உபநிடதங்களுடைய வசனமும் பகவானுடைய வசனமும் யுக்தியும் இருக்கின்றன. "ஆத்மஞானி என்னுடைய ஆத்மா" என்று பகவத்கீதை.

ऋजुं वक्रं वा काष्ठं हुताशदग्धं सदग्नितां याति ।
तत्किं हस्तग्राह्यं ऋजुवक्राकारसत्त्वेऽपि ॥ १२२

விறகுக்கட்டை வளைந்தும் செம்மையாகவும் இருக்கையில் அது கையினால் எடுக்கத்தக்கதாக இருக்கிறது. நெருப்பு பற்றி எரிகையில் அந்தக்கட்டை அக்னிமயமாக இருக்கிறது.

அந்த வளேயிருந்தபோதிலும் அப்பொழுது அதை கையி ளுல் எடுக்க முடிகிறதா?

एवं य आत्मनिष्ठो ह्यात्माकारश्च जायते पुरुषः ।
देहीव दृश्यतेऽसौ परन्त्वसौ केवलो ह्यात्मा ॥ १२३

அதுபோலவே, அநேககாலமாக ஆத்மானுஸந்தானம் செய்ததின் பயனுக பரமாத்மனிடத்திலேயே ஈடுபட்டு, நிலே கொண்டு தன்மயமாக இருக்கிற ஒரு மகான் வெளித்தோற் றத்தினுல் மற்றவர்களேப்போல விளங்கினபோதிலும், அவன் அஞ்ஞானம் நீங்கிய சுத்தபரமாத்மா என்பது நிச்சயம்.

प्रतिफलति भानुरेकोऽनेकशरावोदकेषु यथा ।
तद्वदसौ परमात्मा ह्येकोऽनेकेषु देहेषु ॥ १२४

மேலும், பரமாத்மா ஒருவர் என்பது உதாரணங்களால் விளக்கப்படுகிறது.

ஆகாயத்தில் தோன்றும் சூரியன் ஒன்ருயிருந்தாலும் தண்ணீர்பாத்திரங்கள் பலவற்றில் ப்ரதிபலித்துக்காண்பது போல பரமாத்மா ஒருவனே அனேக சரீரங்களில் சம்பந்தப் பட்டுப் பலவாருகக் காணப்படுகிருன்.

दैवादेकशरावे भग्ने किं वा विलीयते सूर्यः ।
प्रतिबिम्बचञ्चलत्वादर्कः किं चञ्चलो भवति ॥ १२५

அந்தப் பாத்திரங்களில் ஒன்று தெய்வச்செயலாக உடைந்துவிட்டால் ஆகாயசூரியன் நாசமடைகிருனு? பிரதி பிம்பசூரியன் சலிக்கின்ற காரணத்தினுல் ஆகாயசூரியன் சலிக்கின்ருனு?

स्वव्यापारं कुरुते यथैकसवितुः प्रकाशेन ।
तद्वच्चराचरमिदं ह्येकात्मसत्तया चलति ॥ १२६

ஒரே சூரியனுடைய ஒளியால் உலகம் தம் தம் காரியத்தைச் செய்வதுபோல் ஒரே பரமாத்மாவினுடைய சம்பந்தத்தினால் இந்த சராசரப்பிரபஞ்சம் நடக்கின்றது.

येनोदकेन कदलीचम्पकजात्यादयः प्रवर्धन्ते ।
मूलकपलाण्डुलशुनास्तेनैवैते विभिन्नरसगन्धाः ॥ १२७

வாழை, சண்பகம், ஜாதி, முல்லை, வெங்காயம், முள்ளங்கி, பூண்டு மற்றும் கிழங்குகள் ஆகிய பலவற்றிற்கும் ஒரேவிதமான நீர்தான் பாசனம்செய்யப்படுகின்றது. ஆயினும், அவைகளின் சுவை, வாசனை முதலியன வேறுபட்டிருக்கின்றன.

एको हि सूत्रधारः काष्ठप्रकृतीरनेकशो युगपत् ।
स्तम्भाग्रपट्टिकायां नर्तयतीह प्रगूढतया ॥ १२८

சூத்திரதாரன் ஒருவனே தன்கையில் வைக்கப்பட்ட பொம்மைகளை பற்பல விதத்தில் ஆட்டுகிறான்.

गुडखण्डशर्कराद्या भिन्नाः स्युर्विकृतयो यथैकेक्षोः ।
केयूरकङ्कणाद्या यथैकहेम्नो भिदाश्च पृथक् ॥ १२९
एवं पृथक्स्वभावं पृथगाकारं पृथग्वृत्ति ।
जगदुच्चावचमुच्चैरेकेनैवात्मना चलति ॥ १३०

இனத்தில் மாறுபடாவிடினும் கரும்பு, இனிப்பில் சிறிது மாறுதல் உள்ள வெல்லம், சக்கரை, கற்கண்டு இவைகளுக்கு காரணமாகிறது. தங்கம் ஒரே விதமாயினும் பலாகங்களான நகைகளுக்கு காரணமாகின்றது. இவ்வாறு ஒரே நிலையிலுள்ள பரமாத்மாவினால் உலகம்மாறுபட்ட சுபாவமுள்ளதாகவும், வெவ்வேறு உருவம், செயல் இவைகள் உள்ளதாகவும் தன் வேலையை நடத்திக்கொள்ளுகிறது.

स्कन्धधृतसिद्धमन्नं यावन्नाश्नाति मार्गगस्तावत् ।
स्पर्शभयक्षुत्पीडे तस्मिन्भुक्ते न ते भवतः ॥ १३१

[வேறு பொருளாகவிருந்தால் அச்சம். அது நீங்கின்றல் ஆனந்தம் என்பதற்கு உதாரணம் கூறுகிறார்.] வழி யாத்திரை செய்கிறவன் வழியில் உணவிற்காக அன்னத்தை மூட்டையாகக் கட்டிக்கொண்டுபோகிறான். சுமந்துசெல்லுகையில் பாரமாகவிருக்கிறது. ஆகையால் கைகளிலும் தோள்களிலும் அடிக்கடி மாற்றிக்கொள்ளுகிறான். மற்றவர்கள் அதை கைப்பற்றாமலிருக்கவேண்டும் என்ற எண்ணம் உண்டாகிறது. கீழேவைத்தால் நாய் முதலிய பிராணிகள் தொட்டுவிடும் என்று அஞ்சுகிறான். அந்த உணவுப் பொருள் மூட்டையிலிருக்கையில் தனக்கு பசியுமுண்டாகிறது. அதனைச் சாப்பிட்டுவிட்டால் இந்த வருத்தங்கள் யாவும் நீங்கிவிடுகின்றன. [அதுபோலவே பரமாத்மாவை வேற்றுமையாக உணரும்பொழுது பல துன்பங்கள் ஏற்படுகின்றன. வேற்றுமையை அகற்றி தானாகவே உறுதிகொண்டால் துன்பங்கள் பாதிப்பதில்லை.]

मानुषमतङ्गमहिषश्वसूकरादिष्वनुस्यूतम् ।
यः पश्यति जगदीशं स एव भुङ्क्तेऽद्वयानन्दम् ॥ १३२

ஆகையால் மனிதன், யானை, கடா, நாய், பன்றி முதலான எல்லா சரீரங்களிலும் வியாபித்துக்கொண்டிருக்கும் ஈசுவரனை உண்மையாக எவனுணர் அறிகின்றானோ அவன் அழிவற்றதும் நிகரற்றதுமான பேரானந்தத்தை அனுபவிக்கிறான்.

# ११. कर्तृत्वभोक्तृत्वप्रकरणम्

यद्वत्सूर्येऽभ्युदिते स्वव्यवहारं जनः कुरुते ।
तं न करोति विवस्वान्न कारयति तद्वदात्माऽपि ॥ १३३

கர்த்தா போக்தா என்ற நிலைமையைக் கூறும் பிரகரணம்.

*சூரியன் உதிக்கையில் உலகம் தன் காரியத்தைச்செய்து கொள்ளுகிறது. சூரியன் உலகத்தின் காரியத்தைச் செய்வதுமில்லை. பிரேரணையும் செய்கிறதில்லை. பரமாத்மாவும் அதுபோலவே ஜீவன் செய்கிற காரியத்தில் ஈடுபடுவதில்லை.*

लोहे हुतभुग्व्याप्ते लोहान्तरताड्यमानेऽपि ।
तस्यान्तर्गतवह्नेः किं स्यान्निर्घातजं दुःखम् ॥ १३४

*இரும்பு நெருப்பிலிட்டு காய்ச்சப்படுகிறது. அதில் தீப்பற்றியிருக்கையில் சுத்தி முதலிய ஆயுதங்களால் அடிக்கப்படுகிறது. அப்படியடிப்பதினாலுண்டாகிற வேதனை (மாறுதல்) நெருப்பிற்குண்டா?*

निष्ठुरकुठारघातैः काष्ठे संछेद्यमानेऽपि ।
अन्तर्वर्ती वह्निः किं घातैश्छेद्यते तद्वत् ॥ १३५
तनुसंबन्धाज्जातैः सुखदुःखैर्लिप्यते नात्मा ।
ब्रूते श्रुतिरपि भूयोऽनश्नन्नन्योऽभिचाकशीत्यादि ॥

*விறகுக்கட்டை கோடரியினால் உடைக்கப்படும்போது அதற்குள் மறைந்திருக்கும் அக்னிக்கு மாறுதல் ஏதாவது உண்டாகிறதா? அதுபோல், சரீரத்திலுண்டாகும் வியாதி முதலியவைகளால் ஆத்மா சம்பந்தமுறுவதில்லை. இந்த விஷயத்தை வேதம் கூறுகிறது. ஜீவனிலிருந்து வேறுபட்ட பரமாத்மா கர்மங்களின் பயனையனுபவிக்காதவனாக விளங்குகிறான்.*

निशि वेश्मनि प्रदीपे दीप्यति चौरस्तु वित्तमपहरति ।
ईरयति वारयति वा तं दीपः किं तथाऽऽत्माऽपि ॥ १३७

இரவில் இல்லத்தில் தீபம் விளங்கிக்கொண்டிருக்கிறது. அச்சமயத்தில் திருடன் புகுந்து பொருளைத்திருடுகிறான். அந்தவிஷயத்தில் தீபம் திருடனைத் தூண்டுகிறதா, அல்லது தடுக்கிறதா? ஒன்றுமில்லை. பரமாத்மாவும் அதுபோலவே தான்.

गेहान्ते दैववशात्कस्मिंश्चित्समुदिते विपन्ने वा ।
दीपस्तुष्यत्यथवा खिद्यति किं तद्वदात्माऽपि ॥ १३८

இல்லத்திற்குள் தெய்வச்செயலால் நிகழும் ஜனனத்திலோ, மரணத்திலோ தீபம் சந்தோஷத்தையோ, வருத்தத்தையோ அடைகிறதா? அதுபோலவே ஆத்மாவும் சம்பந்தமில்லாதவன்.

---

## १२. स्वप्रकाशताप्रकरणम्

रविचन्द्रवह्निदीपप्रमुखाः स्वपरप्रकाशाः स्युः ।
यद्यपि तथाप्यमीभिः प्रकाश्यते क्वापि नैवात्मा ॥ १३९

ஆத்மா ஸ்வயம்பிரகாசன் என்பதைக் கூறும் பிரகரணம்.

சூரியன், சந்திரன், அக்னி, தீபம் முதலிய ஒளிகள் தாம் பிரகாசிப்பதுடன் மற்றப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்கின்றன. ஆயினும் அவைகளால் ஆத்மா பிரகாசிக்கப் படுவதில்லை.

चक्षुर्द्वारैव स्यात्परात्मना भानमेतेषाम् ।
यद्वा तेऽपि पदार्था न ज्ञायन्तेऽथ केवलालोकात् ॥ १४०

பரமாத்மா கண்மூலமாக பதார்த்தங்களை
கிறார் என்று கூறவேண்டும். ஒளிமாத்திரமிருந்தால் பதார்த்
தங்கள் அறிந்துகொள்ளப்படுவதில்லை.

तत्राप्यक्षिद्वारा सहायभूतो न चेदात्मा ।
नो चेत्सत्यालोके पश्यत्यन्धः कथं नार्थान् ॥ १४१

ஒளியிருக்கையில் பரமாத்மாவே கண்மூலமாக பதார்த்
தங்களை விளக்குவதற்குக் காரணம் என்று கூறவேண்டும்.
கண் காரணம் என்று ஒப்புக்கொள்ளாவிடில் குருடன் ஏன்
பதார்த்தங்களைப் பார்க்கக்கூடாது. (ஆகையால் கண்ணின்
உதவி வேண்டும்.)

सत्यात्मन्यपि किं नो ज्ञानं तच्चेन्द्रियान्तरेण स्यात् ।
अन्धे ह्यप्रतिबन्धे करसम्बन्धे पदार्थभानं हि ॥ १४२

ஆத்மா இருந்தால் பதார்த்தங்கள் விளங்குவது திண்
ணம் கண் இல்லாவிடினும் ஆத்மா கையினால் தொட்டு
விஷயங்களை உணருகிறானன்றோ! [ஆகையால் ஆத்மா
எல்லாவற்றையும் விளக்கிக்கொண்டு தானாகவே விளங்கு
கிறவன்.]

जानाति येन सर्वं केन च तं वा विजानीयात् ।
इत्युपनिषदामुक्तिर्बध्यत आत्माऽऽत्मना तस्मात् ॥ १४३

எதனால் எல்லவாற்றையும் அறிந்துகொள்ளுகிறானோ,
அந்த ஆத்மாவை அறிந்துகொள்ளுவதற்கு உதவி யாது?
ஒன்றுமில்லை. அது தானாகவே விளங்குகிறது என்று உப
நிஷத்துக்கள் கூறுகின்றன.

## १३. नादानुसन्धानप्रकरणम्

यावत्क्षणं क्षणार्धं स्वरूपपरिचिन्तनं क्रियते ।
तावद्दक्षिणकर्णे त्वनाहतः श्रूयते शब्दः ॥ १४४

நாதத்தின் அனுசந்தானப்பிரகரணம்.

ஒரு கணம் அல்லது அரைக்கணமாவது தன் உருவம் தியானம்செய்யப்படும்பொழுது வலது காதில் ஒரு ஒலி கேட்கப்படுகிறது. அது அனாகதம் என்று கூறப்படுகிறது. [அனாகதம் என்றால் இருதயஸ்தானம். அங்கிருந்து இயங்கும் ஒலி என்று பொருள். வேறு ஒரு பொருள்-ஆகதம்-அடிக்கப்பட்டது. பேரிகை முதலிய வாத்தியங்களை அடித்தால் ஒலி ஒலிக்கிறது. இந்த ஒலியோவெனில் அடிக்கப்படாமலேயே உண்டாகிறது. ஆகையால் அநாகதம் என்று கூறப்படுகிறது என்றும் பொருள்.]

सिद्ध्यारम्भस्थिरताविश्रमविश्वासबीजशुद्धीनाम् ।
उपलक्षणं हि मनसः परमं नादानुसन्धानम् ॥ १४५

யோகசித்தியின் உற்பத்தி, (மனதின்) நிச்சலத்தன்மை, ஓய்வு எடுத்துக்கொள்ளக்கூடிய இடம், நம்பிக்கை, தியானம் செய்யவேண்டிய பொருள், தூய்மை இவைகளுக்கு அந்த நாதானுசந்தானம் அறிகுறியாகும்.

भेरीमृदङ्गशंखाद्याहतनादे मनः क्षणं रमते ।
किं पुनरनाहतेऽस्मिन्मधुमधुरेऽखण्डिते स्वच्छे ॥ १४६

பேரிகை, மிருதங்கம், சங்கம் முதலியவைகளில் செயற்கையினுலுண்டாகும் ஒலியினுல் மனது சிறுதுநேரமாவது சந்தோஷத்தை அடைகிறதில்லையா? அப்படியிருக்கையில், தேனைக்காட்டிலும் இனிமையானதும், தூயதுமான இந்த இயற்கை ஒலியில் ஏன் ஆனந்தம் கொள்ளாது?

चित्तं विषयोपरमाद्यथा यथा याति नैश्चल्यम् ।
वेणोरिव दीर्घतरस्तथा तथा श्रूयते नादः ॥ १४७

பொருள்களிலிருந்து விலகுவதால் மனது எவ்வளவுக் கெவ்வளவு உறுதியான நிலையை அடைகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு குழலின் நாதம்போல் அந்த நாதம் நீடித்து கேட்கப்படுகின்றது.

नादाभ्यन्तर्वर्ति ज्योतिर्यद्वर्तते हि चिरम् ।
तत्र मनो लीनं चेन्न पुनः संसारबन्धाय ॥ १४८

அந்த நாதத்திற்குள் ஒளி ஒன்று விளங்குகிறது. மனம் அந்த ஒளியில் நீடித்தலயமடைந்தால் அவன் ஸம்ஸார பந்தத்திற்கு உட்படான்.

परमानन्दानुभवात्सुचिरं नादानुसन्धानात् ।
श्रेष्ठश्चित्तलयोऽयं सत्स्वन्यलयेष्वनेकेषु ॥ १४९

மனது நிலையைப் பெறுவதற்குரிய விஷயங்களும் வழிகளும் அனேகங்கள் உள. ஆயினும நீடித்தகாலம் இந்த நாதானுசந்தானம செய்வதனால் உண்டாகும் பேரானந்தத்தை அனுபவித்தால் அதுவே சாலச்சிறந்த சித்தலயம்.

---

## १४. मनोलयप्रकरणम्

संसारतापतप्तं नानायोनिभ्रमात्परिश्रान्तम् ।
लब्ध्वा परमानन्दं न चलति चेतः कदा क्वापि ॥ १५०
अद्वैतानन्दभरात्किमिदं कोऽहं च कस्याहम् ।
इति मन्थरतां यातं यदा तदा मूर्च्छितं चेतः ॥ १५१
चिरतरमात्मानुभवादात्माकारं प्रजायते चेतः ।
सरिदिव सागरयाता समुद्रभावं प्रयात्युच्चैः ॥ १५२

மனோலயப்பிரகரணம்.

ஸம்ஸாரத்திலுள்ள துன்பங்களால் தாபத்தை அனுபவித்தும், பற்பல ஜாதிகளில் பிறவியுற்றும், களைப்படைந்த மனம் பேரானந்தத்தை அடைந்து எக்காரணத்தைக் கொண்டும், எக்காலத்திலும் அதிலிருந்து நழுவாமல் நிலைபெற்றால் "நான் யார், யாருடையவன்" என்ற வேற்றுமையகன்று, அந்த மனம் உல்லாசத்தையடைகின்றது. சமுத்திரத்தை அடைந்த பிறகு அந்த நதி சமுத்திரமாகவே இருப்பதுபற்றி எவ்வாறு பிரிக்கமுடிகிறதில்லையோ, அவ்வாறே நீண்டகாலம் செய்த தியானத்தின் வலிமையால் பரமாத்மாவில் நிலைபெற்ற சித்தமும் அத்தன்மையுள்ளதாகவே விளங்குகிறது.

आत्मन्यनुप्रविष्टं चित्तं नापेक्षते पुनर्विषयान् ।
क्षीरादुद्धृतमाज्यं यथा पुनः क्षीरतां न यातीह ॥ १५३

பாலிலிருந்து எடுக்கப்பட்ட நெய் பிறகு பாலாக மாறுகிறதில்லையல்லவா? அதுபோல் பரமாத்மனிடத்தில் புகுந்த மனம் மற்ற பொருள்களில் பற்றிக்கொள்ளுகிறதில்லை.

दृष्टौ द्रष्टरि दृश्ये यदनुस्यूतं च भानमात्रं स्यात् ।
तत्रोपक्षीणं चेच्चित्तं तन्मूर्च्छितं भवति ॥ १५४

திருஷ்டி, த்ரஷ்டா, திருச்யம் (அறிவு, அறிகிறவன், அறியப்படுபொருள்) என்ற மூன்றுகளிலும் தொடர்ந்து விளங்கும் சைதன்யம் ஒன்று. அந்த சித்தில் மட்டும் மனம் லயமடைந்தால் மற்றவைகளில் தன்செயல் குன்றுகிறது. அதுதான் சித்தத்தின் விகாஸம்.

याति स्वसंमुखत्वं दृङ्मात्रं वा यदा तदा भवति ।
दृश्यद्रष्टृविभेदो ह्यसंमुखेऽस्मिंश्च तद्भवति ॥ १५५

ஞானம் அறியவேண்டிய பொருள்களுடனும், அறி கின்ற சேதனனுடனும் சம்பந்தம் பெறுகிற பொழுதுதான் திருச்யம், த்ரஷ்டா ' என்ற வேற்றுமைகளும் நிலவுகின்றன. அந்த சம்பந்தம் அறுபட்டால் ' திருக்கு ' தான் (மிகுதியாக) இருக்கிறது.

एकस्मिन्दृङ्मात्रे त्रेधा द्रष्ट्रादिकं हि समुदेति ।
त्रिविधे तस्मिल्लीने दृङ्मात्रं शिष्यते पश्चात् ॥ १५६

ஆகையால திருக்கு என்ற பொருளில் தான் மற்ற இரண்டு மாறுபாடுகளும் தோன்றுகின்றன. அந்த வேற்று மை நீங்கினால் பிறகு திருக்குமட்டும் நிலைக்கின்றது.

दर्पणतः प्राक्पश्चादस्ति मुखं प्रतिमुखं तदा भाति ।
आदर्शेपि च नष्टे मुखमस्ति मुखे तथैवात्मा ॥ १५७

கண்ணாடிக்கு முன்னாலும் பின்னாலும ஒருவனுடைய முகமிருக்கும்பொழுது, பிரதிபலித்த முகம் இருபுறமும் தோன்றுகிறது. கண்ணாடியை எடுத்துவிட்டால் தலையி லுள்ள முகமொன்றே நிலைக்கிறது அதுபோல் ஆத்மா விஷயங்களுடன் சமபந்த முற்றால் மூன்றுவிதமான பேதங் கள். இல்லாவிடில் ஒரே நிலைமை.

---

## १५. प्रबोधप्रकरणम्

माधुर्यं गुडपिण्डे यत्तत्तस्यांशकेऽणुमात्रेऽपि ।
एवं न पृथग्भावो गुडत्वमधुरत्वयोरस्ति ॥ १५८

பிரபோதப்பிரகரணம்.

5க்கும் இன்பச்சுவை அதன் ய தூளிலுமிருக்கிறது. ஆகவே வெல்லமும் சுவையும் ஒன் றையொன்று பிரிதலில்லை.

अथवा न भिन्नभावः कर्पूरामोदयोरेवम् ।
आत्मस्वरूपमनसां पुंसां जगदात्मतां याति ॥ १५९

அதுபோலவே, கர்ப்பூரத்தைவிட்டும் அதன் மணம் நீங்குதலில்லை. ஆகையால், ஆத்மாவிடம் ஒன்றாகச்சேர்ந்த மனமுற்ற மனிதர்களுக்கு உலகம் ஆத்மாவாகவே ஆகிறது.

यद्भावानुभवः स्यान्निद्रादौ जागरस्यान्ते ।
अन्तः स चेत्स्थिरः स्याल्लभते हि तदाऽद्वयानन्दम् ॥

தூயிலிலிருந்த ஆனந்தத்தினுடைய அனுபவம், விழிப் புணர்ச்சியிலும் அகத்தில் அசைவற்றதாக நிலைத்தால், அப்பொழுது அவன் நிகரற்ற ஆனந்தத்தை அடைந்தவனு கிறான்.

अतिगम्भीरेऽपारे ज्ञानचिदानन्दसागरे स्फारे ।
कर्मसमीरणतरला जीवतरङ्गावलिः स्फुरति ॥ १६१

ஆழமறியமுடியாததும், கரைகாண முடியாததுமாகிய கடலில் காற்றினல் அலைகளின் திரள் கிளயபுவதுபோல் [இத்தகையன் என்று மறைகளாலும் முறையிடமுடியாத] ஞானனந்தக்கடலாகிய பரமாத்மனிடமிருந்து வினைகளின் கூட்டமாகிய காற்றினல் தூண்டப்பெற்று ஜீவர்களாகிய அலைகளின் திரள் தோன்றுகிறது.

खरतरकरैः प्रदीप्तेऽभ्युदिते चैतन्यतिग्मांशौ ।
स्फुरति मृषैव समन्तादनेकविधजीवमृगतृष्णा ॥ १६२

கதிரவன் உதித்துக் கடுமையாகக் காயும்பொழுது கானல் ஜலம் தோன்றுவதுபோல் பரமாத்மாவின் மாயாவிலாஸம் உல்லாஸமாக விசுகையில் நிலையற்ற ஜீவராசிகள் சுற்றிலும் தோன்றுகின்றன.

अन्तरदृष्टे यस्मिञ्जगदिदमारात्परिस्फुरति ।
दृष्टे यस्मिन्सकृदपि विलीयते काप्यसद्रूपम् ॥ १६३

அந்த பரமாத்மாவின் உருவம் ஞானக்கண்ணினால் அகத்தில் காணப்படாவிடில் இந்த உலகவேற்றுமை விளங்குகிறது. ஒருதடவையாவது அகத்தில் அவர் உண்மையாக காணப்பெற்றால் இந்த வேற்றுமை அறுபடுகிறது.

बाह्याभ्यन्तरपूर्णः परमानन्दार्णवे निमग्नो यः ।
चिरमाप्लुत इव कलशो महाह्रदे जह्नुतनयायाः ॥ १६४

எவன் ஒருவன் பரமானந்த சமுத்திரத்தில் மூழ்குகிறானோ, அவன் கங்கையின் பெரிய மடுவில் மூழ்கிக்கிடக்கும் குடம்போல் உள்ளும் வெளியும் நிறைந்தவனாகவிருக்கிறான்.

पूर्णात्पूर्णतरे परात्परतरेऽप्यज्ञातपारे हरौ
संवित्स्फारसुधार्णवे विरहिते वीचीतरङ्गादिभिः ।
भास्वत्कोटिविकासितोज्ज्वलदिगाकाशप्रकाशे परे
स्वानन्दैकरसे निमग्नमनसां न त्वं न चाहं जगत् ॥

நிறைந்த பொருளைக்காட்டிலும் நிறைந்தவரும், சிறந்ததைக்காட்டிலும் சிறந்தவரும், எல்லையறியமுடியாதவரும், அலைத்திரளில்லாத பேரானந்தாமிருதக்கடலும், கோடிக்கணக்கான சூரியர்களால் பிரகாசிக்கும் திசைகளும் ஆகாயமும் போன்றவரும், ஆத்மானந்தஸ்வரூபியுமாகிய ஸ்ரீஹரியினிடம் ஆழ்ந்த மனமுடையவர்களுக்கு நான், நீ, மற்ற உலகம் என்னும் வேற்றுமை இல்லை.

## १६. द्विधाभक्तिप्रकरणम्

चित्ते सत्त्वोत्पत्तौ तटिद्विव बोधोदयो भवति ।
तर्ह्येव स स्थिरः स्याद्यदि चित्तं शुद्धिमुपयाति ॥ १६६

த்விதா(இரண்டுவித)பக்திப் பிரகரணம்.

*சித்தத்தில் ஸத்வகுணம் உதித்துநிலைத்தால் மின்னல் போல் ஞானம் உதயமாகிறது. அந்த ஞானம் அப்பொழுதே நிலைபெற்றால் சித்தம் சுத்தமாகிறது.*

शुद्ध्यति हि नान्तरात्मा कृष्णपदाम्भोजभक्तिमृते ।
वसनमिव क्षारोदैर्भक्त्या प्रक्षाल्यते चेतः ॥ १६७

*ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மனது பாதகமலங்களில் பக்தியின்றி சித்தம் சுத்தமடைகிறதில்லை. சாரமண்கலந்த தண்ணீரினால் வஸ்திரம் சுத்தம் செய்யப்படுவதுபோல் சித்தம் பக்தியினால் சுத்தம்செய்யப் படுகிறது.*

यद्वत्समलादर्शे सुचिरं भस्मादिना शुद्धे ।
प्रतिफलति वक्त्रमुच्चैः शुद्धे चित्ते तथा ज्ञानम् ॥ १६८

*அழுக்கடைந்த கண்ணாடியைச் சாம்பல் முதலியதினால் சுத்தம்செய்தால் அதில் முகம் நன்கு விளங்குவதுபோல் பரிசுத்தமான சித்தத்தில் ஆத்மஞானம் விளங்குகிறது.*

जानन्तु तत्र बीजं हरिभक्त्या ज्ञानिनो ये स्युः ।
मूर्तं चैवामूर्तं द्वे एव ब्रह्मणो रूपे ॥ १६९

*ஞானிகளாக எவர்கள் விளங்குகின்றனரோ, அவர்களுடைய ஞானத்திற்குக் காரணம் 'ஹரிபக்தி'யேயாகும். பரம்பொருளுக்கு உடல் உள்ளது, உடலற்றது என்று இரு உருவங்கள் உள.*

इत्युपनिषत्तयोर्वा द्वौ भक्तौ भगवदुपदिष्टौ ।
क्लेशादक्लेशाद्वा मुक्तिः स्यादेतयोर्मध्ये ॥ १७०

இவ்வாறு உபநிடதங்கள் கூறுகின்றன. அந்த இருவகை உருவங்களை பஜிக்கின்ற பக்தர்கள் இருவகையினர் என்று பகவானால் கூறப்பட்டுள்ளது. இருவித பக்திகளில் ஒன்றினால் கஷ்டத்து முக்தி கிட்டுகிறது என்றும், மற்றொன்றினால் எளிதில் கிட்டுகிறது என்றும் தெரிகிறது.

स्थूला सूक्ष्मा चेति द्वेधा हरिभक्तिरुद्दिष्टा ।
प्रारम्भे स्थूला स्यात्सूक्ष्मा तस्याः सकाशाच्च ॥ १७१

மேலும், ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்று ஹரிபக்தி இருவகையாகக் கூறப்படுகிறது. ஆரம்பத்தில் ஸ்தூலபக்தியும் பிறகு அதிலிருந்து ஸூக்ஷ்மபக்தியும் உண்டாகிறது.

स्वाश्रमधर्माचरणं कृष्णप्रतिमार्चनोत्सवो नित्यम् ।
विविधोपचारकरणैर्हरिदासैः संगमः शश्वत् ॥ १७२
कृष्णकथासंश्रवणे महोत्सवः सत्यवादश्च ।
परयुवतौ द्रविणे वा परापवादे पराङ्मुखता ॥ १७३
ग्राम्यकथासूद्वेगः सुतीर्थगमनेषु तात्पर्यम् ।
यदुपतिकथावियोगे व्यर्थं गतमायुरिति चिन्ता ॥ १७४
एवं कुर्वति भक्तिं कृष्णकथानुग्रहोत्पन्ना ।
समुदेति सूक्ष्मभक्तिर्यस्यां हरिरन्तराविशति ॥ १७५

தன்னுடைய ஆசிரமத்திற்குரிய கடமைகளைச் செய்தல், தினம்தோறும் ஸ்ரீகிருஷ்ணனுடைய விக்கிரஹத்திற்கு அர்ச்சனை செய்து சந்தோஷமுறுதல், அடிக்கடி விஷ்ணு பக்தர்களைச் சந்தித்து அவர்களுக்கு உபசாரம்செய்தல், ஸ்ரீகிருஷ்ணகதைகளைக் கேட்பதில் மிகச் சந்தோஷமுறுதல்,

உண்மையே பேசுதல், பிறர்மனைவி பொருள்களிலும் பிறநிந்தையிலும் விருப்பமின்மை, உலகவியவகாரங்களில், அஞ்சுதல், புண்ணியதீர்த்தங்களுக்குச் செல்ல விருப்பம், யதுநாயகனுகிய ஸ்ரீகிருஷ்ணனுடைய கதைக்குத் தடைநேர்ந்தால் ஆயுள் வீணுயிற்று என்று தாபம் ஆகிய இவைகள் ஏற்படுகையில் பக்தி நிலைத்து, ஸ்ரீகிருஷ்ணகதையைக் கேட்டதினுல் ஸூக்ஷ்மபக்தி உண்டாகிறது. அந்த ஸூக்ஷ்மபக்தி உண்டானுல் 'ஹரி' ஹிருதயத்தில் வாசம்செய்கிருர்.

स्मृतिसत्पुराणवाक्यैर्यथाश्रुतायां हरेर्मूर्तौ ।
मानसपूजाभ्यासो विजननिवासेऽपि तात्पर्यम् ॥ १७६

ஸூக்ஷ்மபக்தியில், ஸ்மிருதிகளாலும் நல்ல புராணங்களாலும் கூறப்பட்ட நாராயணனுடைய உருவத்தைக் கேட்டறிந்து, அதனை தியானம்செய்துகொண்டு, மானஸபூஜையை அடிக்கடிச் செய்தலும், ஜனநெருக்கமில்லாத இடத்தில் வாசம்செய்வதில் அபிலாஷையும் நிலவுகிறது.

सत्यं समस्तजन्तुषु कृष्णस्यावस्थितेर्ज्ञानम् ।
अद्रोहो भूतगणे ततस्तु भूतानुकम्पा स्यात् ॥ १७७

எல்லா உயிர்களிலும் ஸ்ரீகிருஷ்ணசைதன்யம் விளங்குகின்றது என உண்மையான உணர்வும், பிராணிகளுக்குத் துன்பம் விளைவிக்காமையும், பிராணிகளிடம் கருணையும் உண்டா

प्रमितयदृच्छालाभे संतुष्टिर्दारपुत्रादौ ।
ममताशून्यत्वमतो निरहङ्कारत्वमक्रोधः ॥ १७८

முயர்சியின்றிக் கிடைத்த மிதமான பொருளினுல் சந்தோஷம், மனைவிமக்கள் முதலானவைகளில் பற்றின்மை, 'நான்' என்ற அகந்தையின்மை, கோபமின்மை இவைகளும் நிலவுகின்றன.

मृदुभाषिता प्रसादो निजनिन्दायां स्तुतौ समता ।
सुखदुःखशीतलोष्णद्वन्द्वसहिष्णुत्वमापदो न भयम् ॥

இனியசொல் கூறுதல், மனமலர்ச்சி, பிறர் தன்னை நிந்தித்தாலும் துதித்தாலும் மனதிற்கு ஒரே நிலைமை, சுகம் துக்கம், சீதம் உஷ்ணம் என்ற த்வந்த்வங்களை [இரட்டைப் பொருள்கள்] சகித்துக்கொள்ளுதல், ஆபத்திற்கு அஞ்சாமை என்றவைகளும் நிகழ்கின்றன.

निद्राहारविहारेष्वनादरः संगराहित्यम् ।
वचने चानवकाशः कृष्णस्मरणेन शाश्वती शान्तिः ॥

நித்திரை, ஆகாரம், வியவகாரம் இவைகளில் ஆதரவின்மை, ஜனங்களுடைய ஸகவாசத்தை விலக்குதல், அதிகப்பேச்சுக்கு அவகாசமளிக்காமலிருத்தல், ஸ்ரீகிருஷ்ணனை ஸ்மரணைசெய்வதால் மனதிற்கு அமைதி என்பவையும் விளங்குகின்றன.

केनापि गीयमाने हरिगीते वेणुनादे वा ।
आनन्दाविर्भावो युगपत्स्याद्धृष्टसात्विकोद्रेकः ॥ १८१

யாராவது ஸ்ரீகிருஷ்ணனைப்பற்றி பாடும்பொழுதும், குழல் வாசிக்கும்பொழுதும் அதனைக்கேட்டு மெய்சிலிர்த்தல், ஆனந்தக்கண்ணீர் பெருகுதல் என்றவையும் நிலவும்.

तस्मिन्ननुभवति मनः प्रगृह्यमाणं परात्मसुखम् ।
स्थिरतां याते तस्मिन्याति मदोन्मत्तदन्तिदशाम् ॥

இவ்வாறு மனம் பரமாத்மஞானத்தினால் உண்டாகும் சுகத்தை அனுபவிக்கும்பொழுது மதம்பிடித்த யானையின் நிலைமையைப் பெறுகிறது.

जन्तुषु भगवद्भावं भगवति भूतानि पश्यति क्रमशः ।
एतादृशी दशा चेत्तदैव हरिदासवर्यः स्यात् ॥ १८३

*பிராணிகளில் பகவானுடைய தன்மையையும், பகவானிடத்தில் பிராணிகளும் மற்ற உலகமும் நிலைத்திருக்கின்றதாகவும் காலக்கிரமத்தில் நன்கு உணருகின்ருன். அந்த நிலைமை நிலவினால், அவன் விஷ்ணுபக்தர்களில் சிறந்தவன் என்றே கூறவேண்டும்.*

---

## १७. ध्यानविधिप्रकरणम्

यमुनातटनिकटस्थितवृन्दावनकानने महारम्ये ।
कल्पद्रुमतलभूमौ चरणं चरणोपरि स्थाप्य ॥ १८४
तिष्ठन्तं घननीलं स्वतेजसा भासयन्तमिह विश्वम् ।
पीताम्बरपरिधानं चन्दनकर्पूरलिप्तसर्वाङ्गम् ॥ १८५
आकर्णपूर्णनेत्रं कुण्डलयुगमण्डितश्रवणम् ।
मन्दस्मितमुखकमलं सुकौस्तुभोदारमणिहारम् ॥ १८६
वलयाङ्गुलीयकाद्यानुज्ज्वलयन्तं स्वलंकारान् ।
गलविलुलितवनमालं स्वतेजसाऽपास्तकलिकालम् ॥ १८७
गुञ्जारवालिकलितं गुञ्जापुञ्जान्विते शिरसि ।
भुञ्जानं सह गोपैः कुञ्जान्तरवर्तिनं हरिं स्मरत ॥ १८८

தியானத்தைப்பற்றிக் கூறும் பிரகரணம்.

*யமுனை நதிக்கரையில மிகவும அழகாகவிளங்குகின்ற பிருந்தாவனத்தில் கற்பகமரத்தினடியில் கால்மேல் காலை யிட்டுக்கொண்டு விளங்குகின்றவரும், கரிய மேகநிறமுற்றவரும், தன்னுடைய ஒளியால் உலகத்தை பிரகாசிக்கச்செய்*

கின்றவரும், பீதாம்பரம் தரித்தவரும், பச்சைக்கர்ப்பூரம் சந்தனக்குழம்பு இவைகளைப் பூசிக்கொண்டவரும், காது வரையில் நீண்ட கண்களையுடையவரும், இரத்தினகுண்டலங்களால் அலங்காரம்செய்யப்பட்ட காதுகளுடையவரும், புன்னகைபூத்த தாமரைபோன்ற முகத்துடன் கூடியவரும் சிறந்த கௌஸ்துபரத்னத்துடனும் ஹாரத்துடனும் விளங்குகிறவரும், தங்கவளையல்கள் முதலிய சிறந்த அலங்காரங்களை விளக்குகின்றவரும், கழுத்தில் அசைகின்ற வனமாலையணிந்தவரும், தன்னுடை மகிமையினுல் கலிகாலத்தின் தோஷத்தை நாசப்செய்கின்றவரும், சிறந்த புஷ்பங்கள் விளங்குகின்ற தலையில் வண்டுகளின் இனிய ஹ்ரீங்காரத்துடன் விளங்குகிறவரும், இடையர்களுடன் போஜனம் செய்கிறவரும், காட்டுக்கொடிகளின் புதரில் வசிக்கின்றவருமாகிய ஹரிசப்தத்தின் பொருளான ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை மனதில் ஸ்மரணம்செய்யுங்கள்.

मन्दारपुष्पवासितमन्दानिलसेवितं परानन्दम् ।
मन्दाकिनीयुतपदं नमत महानन्ददं महापुरुषम् ॥ १८९

மந்தாரபுஷ்பத்தின் பரிமளவாசனையுடன் வீசுகின்ற மந்தமாருதத்தினுல் (இளங்காற்றினுல்) சேவிக்கப்பெற்றவரும், பேரானந்தரூபியும், கங்கையைப்பெற்ற பாதங்களையுடையவரும், பேரானந்தத்தை யளிப்பவரும், மகாபுருஷனுமாகிய [அந்த ஸ்ரீகிருஷ்ணபகவானை வணங்குங்கள்.]

सुरभीकृतदिग्वलयं सुरभिशतैरावृतं सदा परितः ।
सुरभीतिक्षपणमहासुरभीमं यादवं नमत ॥ १९०

தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் பரிமள வாசனையால் திசைகள் யாவற்றையும் பரிமளவாசனையுள்ள

தாகச் செய்கின்றவரும், எப்பொழுதும், சுற்றிலும் பசுக்க ளால் சூழப்பெற்றவரும் தேவர்களுக்கு பயத்தை நீக்குகின் றவரும அசுரர்களைக் கொல்லுகின்றவரும், யதுகுலத்தில் தோன்றியவருமான ஸ்ரீகிருஷ்ணை வணங்குங்கள்.

कन्दर्पकोटिसुभगं वाञ्छितफलदं दयार्णवं कृष्णम् ।
त्यक्त्वा कमन्यविषयं नेत्रयुगं द्रष्टुमुत्सहते ॥ १९१

கோடி மன்மதர்களைக்காட்டிலும் அழகுடையவரும், விரும்பிய பொருள்களை யளிக்கின்றவரும், கருணைக்கடலும், ஸச்சிதானந்தரூபியுமாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைவிட்டு வேறு எந்தப்பொருளைக் காண்பதற்கு கண்களிரண்டும் ஆசை கொள்ளும்.

पुण्यतमामतिसुरसां मनोऽभिरामां हरेः कथां त्यक्त्वा ।
श्रोतुं श्रवणद्वंद्वं ग्राम्यं कथमादरं भवति ॥ १९२

மிகப் பரிசுத்தமானதும், மிகச்சுவை நிரம்பியதும், எவ்விதத்திலும் மனதைக்களிக்கச்செய்கின்றதுமாகிய ஹரி யுனுடைய கதையைத்தவிர்த்து இரு செவிகளும் அல்பமான வேறு எந்தக்கதையைக் கேட்பதற்கு சிரத்தை கொள்ளும்?

दौर्भाग्यमिन्द्रियाणां कृष्णे विषये हि शाश्वतिके ।
क्षणिकेषु पापकरणेष्वपि सज्जन्ते यदन्यविषयेषु ॥ १९३

எக்காலத்தும் எங்கும் நிறைந்து விளங்குகின்ற ஸ்ரீகி ருஷ்ணபரமாத்மன் சிறந்த பொருளாக விளங்கும்பொழுது, பாபத்திற்குக் காரணமாயும் அற்பங்களும், அழியக்கூடிய வைகளுமாகிய மற்றப் பொருள்களில் பொறிகள் ஈடுபட்டால் அது அவைகளுடைய பாக்கியமின்மையேயாகும்.

## १८. सगुणनिर्गुणयोरैक्यप्रकरणम्

श्रुतिभिर्महापुराणैः सगुणगुणातीतयोरैक्यम् ।
यत्प्रोक्तं गूढतया तदहं वक्ष्येऽतिविशदार्थम् ॥ १९४

ஸகுணமும் நிர்குணமும் ஒன்று என்று கூறும் பிரகரணம்.

*மறைகளாலும், புராணங்களாலும் பகவானுடைய ஸகுண உருவத்திற்கும், நிர்குண உருவத்திற்கும் பேதமின்மை கூறப்பட்டுள்ளது. அதில் கூறப்பட்டுள்ளபொருள் தெரிந்துகொள்வது கடினம். ஆகையால், அந்த விஷயத்தைத் தெளிவாகக் கூறுகிறேன்.*

भूतेष्वन्तर्यामी ज्ञानमयः सच्चिदानन्दः ।
प्रकृतेः परः परात्मा यदुकुलतिलकः स एवायम् ॥ १९५

*ஞானவடிவமும், ஸச்சிதானந்தரூபியும், பிரகிருதிக்கு [மாயைக்கு] வேறுபட்டவராகவும் எந்தப் பரமன் பிராணிகளில் அந்தர்யாமியாக விளங்குகிறாரோ, அவர் யதுகுலதிலகராகிய இந்த ஸ்ரீகிருஷ்ணர்தான்.*

ननु सगुणो दृश्यतनुस्तथैकदेशाधिवासश्च ।
स कथं भवेत्परात्मा प्राकृतवद्रागरोषयुतः ॥ १९६

*ஸகுணன் எல்லோராலும் காணக்கூடிய உடலையுடையவர், ஒரு இடத்தில் வாசம் செய்கிறவர். பிராகிருதனை ஜீவன்போல் வெறுப்பு விருப்புள்ளவர். அவர் பரமாத்மா என்று எவ்வாறு கூறமுடியும்? [என்று ஆசங்கை உதிக்கிறது].*

इतरे दृश्यपदार्था लक्ष्यन्तेऽनेन चक्षुषा सर्वे ।
भगवाननया दृष्ट्या न लक्ष्यते ज्ञानदृग्गम्यः ॥ १९७

இந்த ஊனக்கண்ணினால் மற்ற எல்லாப் பதார்த்தங்களும் காணப்படுகின்றன. ஆனால், ஞானத்தினால் அறியத்தக்க பகவான் இந்தக் கண்ணினால் அறியத்தக்கவரல்ல.

यद्विश्वरूपदर्शनसमये पार्थाय दत्तवान् भगवान् ।
दिव्यं चक्षुस्तस्माददृश्यता युज्यते नृहरौ ॥ १९८

விச்வரூபத்தைக் காட்டுகையில் பகவான் அர்ஜுனனுக்கு ஞானக்கண்ணையருளினான்றோ! ஆகையால், நரஸிம்ஹரூபியாகிய பகவான் ஊனக்கண்ணினால் அறியத்தக்கவரல்லர்.

साक्षाद्यथैकदेशे वर्तुलमुपलभ्यते रवेर्बिम्बम् ।
विश्वं प्रकाशयति तत्सर्वैः सर्वत्र दृश्यते युगपत् ॥ १९९

சூரியபிம்பம் உருண்டை வடிவமாக ஆகாயத்தில் ஒரு இடத்தில் காணப்படுகிறது. அந்த சூரியபிம்பம் உலகத்தை பிரகாசிக்கச் செய்கின்றது. ஒரேசமயத்தில் எல்லோராலும், எல்லா தேசங்களிலும் காணப்படுகின்றது.

यद्यपि साकारोऽयं तथैकदेशी विभाति यदुनाथः ।
सर्वगतः सर्वात्मा तथाऽप्ययं सच्चिदानन्दः ॥ २००

அதுபோலவே, யாதவர்களுக்கு நாதனாகிய ஸ்ரீகிருஷ்ணன் ஸகுணனாயினும் எங்கும் நிறைந்த ஸர்வஸ்வரூபியான ஸச்சிதானந்தரூபிதான்.

एको भगवान् रेमे युगपद्गोपीष्वनेकासु ।
अथवा विदेहजनकश्रुतदेवभूदेवयोर्हरिर्युगपत् ॥ २०१

ஸ்ரீகிருஷ்ணன் ஒருவராகவே, அநேக கோபஸ்திரீகளுடன் ராஸக்ரீடைசெய்தார். ஒரேசமயத்தில் ஜனகருடையவும் சுருததேவருடையவும் இல்லங்களில் விருந்துபசாரத்தை உட்கொண்டார்.

अथवा कृष्णाकारां स्वचमूं दुर्योधनोऽपश्यत् ।
तस्माद्व्यापक आत्मा भगवान्हरिरीश्वरः कृष्णः ॥ २०२

துரியோதனன், தன்னுடைய சைன்யத்தை ஸ்ரீகிருஷ்ணவடிவமுள்ளதாகவே கண்டான். ஆகையால், உலகநாயகனும், ஹரிசப்தத்தால் சொல்லத்தக்கவரும், பகவானுமாகிய ஸ்ரீகிருஷ்ணன் எங்கும் வியாபித்தவர்.

वक्षसि यदा जघान श्रीवत्सः श्रीपतेः स किं द्वेष्यः ।
भक्तानामसुराणामन्येषां वा फलं सदृशम् ॥ २०३

ஸ்ரீவத்ஸன் என்பவன் மார்பில் உதைத்தான் ஆகையால், அவன் அந்த ஸ்ரீபதிக்கு பகைவன் ஆனனு? இல்லை. பக்தர்களுக்கும் அசுரர்களுக்கும் மற்றவர்களுக்கும் அந்த பகவானல் உண்டாகும் பயன் சமமே.

तस्मान्न कोऽपि शत्रुर्नो मित्रं नाप्युदासीनः ।
नृहरिः सन्मार्गस्थः सफलः शाखीव यदुनाथः ॥ २०४

ஆகையால் அவருக்கு நண்பனும், பகைவனும், உதாசீனனுமில்லை. ஆயினும், நல்லவழியில் நன்கு தழைத்தோங்கித் தாவுகள் தாங்கியதும், நற்சுவைப் பழங்கள் நிரம்பியதுமான நல்லமாம்போல் யாதவகுலதிலகன் எல்லோருக்கும் பயனளிப்பார்.

लोहशलाकानिवहैः स्पर्शाश्मनि भिद्यमानेऽपि ।
स्वर्णत्वमेति लोहं द्वेषादपि विद्विषां तथा प्राप्तिः ॥ २०५

ஸ்பர்சக்கல் இருப்புக்கம்பிகளால் அடிக்கப்பட்டால் அந்த இரும்பு பொன்னுக ஆகின்றது. அதுபோல் பகையுள்ளவர்களுக்கு பகவானையடைதலுண்டு.

नन्वात्मनः सकाशादुत्पन्ना जीवसन्ततिश्चेयम् ।
जगतः प्रियतर आत्मा तत्कृते नैव सम्भवति ॥ २०६

ஆத்மாவிடமிருந்து ஜீவசமூகங்கள் தோன்றினவாகில், ஆத்மா உலகில் அதிகப் பிரியமானதாகவே இருக்கவேண்டும். ஸ்ரீகிருஷ்ணன் விஷயத்தில் அவ்வாறு இல்லை. [என்று ஆசங்கை]

वत्साहरणावसरे पृथगजयोरूपवासनाभूषान् ।
हरिरजमोहं कर्तुं सवत्सगोपान्विनिर्ममे स्वस्मात् ॥ २०७

பிரம்மதேவர் கன்றுகளை அபகரித்தசமயத்தில் அவருடைய அஞ்ஞானத்தை நாசம்செய்வதற்காக ஸ்ரீகிருஷ்ணன் எண்ணிலாக்கன்றுகளாகவும் கோபாலகர்களாகவும் உருவங்களை எடுத்துக்கொண்டு இடையர்குலத்திற்கு எல்லையில்லா அன்பை உண்டுபண்ணிக்கொண்டு விளங்கினர்.

अग्नेर्यथा स्फुलिङ्गाः क्षुद्रास्तु व्युच्चरन्तीति ।
श्रुत्यर्थं दर्शयितुं स्वतनोरतनोत्स जीवसन्दोहम् ॥ २०८

கொழுந்துவிட்டு எரிகிற அக்னியிலிருந்து தீப்பொறிகள் கிளம்புவதுபோல் ஜீவன்கள் பரமாத்மாவினிடமிருந்து உதிக்கின்றனர். என்ற உபநிஷத்தின் அர்த்தத்தை விளக்குவதற்காக பகவான் தன்னுடைய உடலிலிருந்து அநேக ஜீவர்களுடைய சமூகத்தை உதிக்கச்செய்தார்.

यमुनातीरनिकुञ्जे कदाचिदपि वत्सकांश्च चारयति ।
कृष्णे तथार्यगोपेषु च वरगोष्ठेषु चारयत्स्वारात् ॥ २०९
वत्सं निरीक्ष्य दूराद्गावः स्नेहेन संभ्रान्ताः ।
तदभिमुखं धावन्त्यः प्रययुर्गोपैश्च दुर्वाराः ॥ २१०

प्रस्रवभरेण भूयः स्रुतस्तनाः प्राप्य पूर्ववद्वत्सान् ।
पृथुरसनया लिहन्त्यस्तर्णकवत्यः प्रापाययन्प्रमुदा ॥ २११

गोपा अपि निजबालाञ्जगृहुर्मूर्धानमाघ्राय ।
इत्थमलौकिकलाभस्तेषां तत्र क्षणं ववृधे ॥ २१२

ஒருநாள் யமுனைக்கரையில் ஸ்ரீகிருஷ்ணன் கன்றுகளை மேய்த்துக்கொண்டிருக்கையில் முதியோர்களாகிய இடையர்கள் மாடுகளைச் சிறிது தூரத்தில் மேய்த்துக்கொண்டிருந்தனர். அந்தப் பசுக்கள் கன்றுகளைக் கண்டவுடன் அந்தவிடத்திற்குப் பாய்ந்து சென்றன. இடையர்கள் தடுத்தும் அதை மீறி விரைந்துசென்றுப் பாலைச்சொரிந்துகொண்டு அங்கிருந்த கன்றுகளையும் பால் ஊட்டச்செய்தன. இரண்டாவது ஈன்ற கன்றுகளிலிருக்கையிலேயே முதலீற்றுக் கன்றுகளை அன்புடன் நாவினுல் நக்கிக்கொண்டு மிக்கச் சந்தோஷத்துடன் பாலைக்குடிக்கச்செய்தன. இடையர்களும் பையன்களைத் தழுவிக்கொண்டு உச்சிமுகர்ந்தனர். இவ்வாறு அந்தப் பசுக்களுக்கும் இடையர்களுக்கும் இம்மையிலும் மறுமையிலும் கிடைப்பதற்கரிதான அலௌகிகமான ஆனந்தலாபம் நிகழ்ந்தது.

गोपा वत्साश्चान्याः पूर्वं कृष्णात्मका ह्यभवन् ।
तेनात्मनः प्रियत्वं दर्शितमेतेषु कृष्णेन ॥ २१३

இந்த நிகழ்சிக்குமுன் அந்தக் கன்றுகளும் இடையச்சிறுவர்களும் கிருஷ்ணவடிவமாகவே இருந்தனர். ஆகையால், உலகத்திற்கெல்லாம் ஆத்மரூபமான அவர்தான் மற்ற பதார்த்தங்களைக்காட்டிலும் பிரியமானவர் என்பதை விளக்கினுர்.

प्रेयः पुत्राद्वित्तात्प्रेयोऽन्यस्माच्च सर्वस्मात् ।
अन्तरतरं यदात्मेत्युपनिषदः सत्यताऽभिहिता ॥ २१४

புதல்வன், செல்வம் மற்றுமெல்லாப் பொருள்களைக் காட்டிலும், ஆத்மா அதிகப் பிரியமான வஸ்து என்றும் உபநிஷத்துகளால் கூறப்பட்டுள்ளது.

नन्वुच्चावचभूतेष्वात्मा सम एव वर्ततेऽथ हरिः ।
दुर्योधनेऽर्जुने वा तरतमभावं कथं नु गतवान् सः ॥ २१५

உயர்வு, தாழ்வு என்ற வித்தியாசத்துடன் கூடிய பிராணிகளில் ஆத்மா சமமாகவே இருக்கிறான். அப்படியிருக்கையில், துரியோதனனிடத்திலும் அர்ஜுனனிடத்திலும் வெவ்வேறு தன்மையை அடைந்தானன்றோ!

அது ஏன் என்றால், அதற்குக்காரணம் பகவானில்லை. பார்க்கிறவனுடைய தோஷம்தான் காரணம் என்று கூற வேண்டும். அதை விளக்குகிறார் :—

बधिरान्धपङ्गुमूका दीर्घाः खर्वाः सरूपाश्च ।
सर्वे विधिना दृष्टाः सवत्सगोपाश्चतुर्भुजास्तेन ॥ २१६

செவிடன், குருடன், நொண்டி, ஊமையன், வளர்ந்தவன், குட்டையன் என்று இவ்வாறு பற்பல வித்தியாசமான இடையச் சிறுவர்களையும் கன்றுகளையும் பிரம்மதேவர் ஒருவரே ஸ்ரீகிருஷ்ணரூபத்தில் கண்டார், என்றால் அவருடைய பக்தியின் மகிமை அது என்பது நிச்சயம். ஆகவே, அர்ஜுனனைப்போல துரியோதனன் நன்கு, ஸ்ரீ கிருஷ்ணரைத் தெரிந்துகொள்ளாவிட்டால் அது துரியோதனனுடைய குற்றமேயாகும்.

भूतसमत्वं नृहरेः समो हि मशकेन नागेन ।
लोकैः समस्त्रिभिर्वेत्युपनिषदा भाषितः साक्षात् ॥ २१७

யானையினிடத்திலும், கொசுவினிடத்திலும், மற்று எல்லாப் பிராணிகளிடத்திலும் மூன்று உலகங்களிடத்திலும் பகவான் சமமாகவே நிலவுகிறார் என்று உபநிஷத்துக்கள்

आत्मा तावदभोक्ता तथैव ननु वासुदेवश्चेत् ।
नानाकैतवयत्नैः पररमणीभिः कथं रमते ॥ २१८

ஆத்மா போக்தாவல்லன். ஸ்ரீகிருஷ்ணன் ஆத்மாவாகையால் அவரும் ஆத்மாவல்லன் என்பது திண்ணம். அந்த ஸ்ரீகிருஷ்ணன் ஆயர்குலத்து மங்கையர்களுடன் போகமனுபவித்தார் என்றால் இது முரண்பாடு.

सुन्दरमभिनवरूपं कृष्णं दृष्ट्वा विमोहिता गोप्यः ।
तमभिलषन्त्यो मनसा कामाद्विरहव्यथां प्रापुः ॥ २१९

(விடை) மிக அழகியதும் அற்புதமுமான ஸ்ரீகிருஷ்ண விக்ரகத்தைக்கண்ட கோபிகள், அவரால் கவரப்பட்டு அவரை விரும்பினார்கள். அவரை அடையமுடியாமலிருக்கையில் பிரிவாற்றாமையினால் வருந்தினர்.

गच्छन्त्यस्तिष्ठन्त्यो गृहकृत्यपराश्च भुञ्जानाः ।
कृष्णं विनाऽन्यविषयं समक्षमपि जातु नाविन्दन् ॥ २२०

நடக்கும்பொழுதும், நிற்கும்பொழுதும், வீட்டுவேலைகளைச் செய்யும்பொழுதும் நேரில் புலப்படும் பொருளனைவற்றையும் ஸ்ரீகிருஷ்ணனல்லாமல் வேறுவிதமாக அந்த ஆயர் மங்கையர் காணவில்லை.

दुःसहविरहभ्रान्त्या स्वपतीन्दृशुस्तरूनरांश्च पशून् ।
हरिरयमिति सुप्रीताः सरभसमालिङ्गयांचक्रुः ॥ २२१

பிரிவாற்றாமையைத் தாங்கமுடியாமல் பிரமைகொண்டவர்களாக தங்களுடைய கணவர்களையும், மரங்களையும், மனி

தர்களையும், பசுக்களையும், ஸ்ரீகிருஷ்ணரூபமாகவே உணர்ந்து வேகத்துடனும், பிரேமையுடனும் ஆலிங்கனம் செய்து கொண்டனர்.

काऽपि च कृष्णायन्ती कस्याश्चित्पूतनायन्त्याः ।
अपिबत्स्तनमिति साक्षाद्व्यासो नारायणः प्राह ॥ २२२

"ஒருத்தி ஸ்ரீகிருஷ்ணனாகத் தன்னைப்பாவனைசெய்து கொண்டு மற்றொரு கோபியை பூதனையாகப் பாவித்து அவளுடைய ஸ்தன்யத்தைப் பானம்செய்தாள்" என்று வியாஸரூபியான நாராயணன் கூறுகிறார்.

तस्मान्निजनिजदयितान्कृष्णाकारान्व्रजस्त्रियो वीक्ष्य ।
स्वपरनृपतिपत्नीनामन्तर्यामी हरिः साक्षात् ॥ २२३

ஆகையால் ஆயர்குல மங்கையர்கள் தம தம் கணவன்மார்களை ஸ்ரீகிருஷ்ணனாகவே உணர்ந்தமையால், தனக்கும், பிறருக்கும், அரசர்களுக்கும் அவர்களுடைய மனைவிமார்களுக்கும் ஸ்ரீகிருஷ்ணன் 'அந்தர்யாமி' என்பதில் ஐயமில்லை.

परमार्थतो विचारे गुडतन्मधुरत्वदृष्टान्तात् ।
नश्वरमपि नरदेहं परमात्माकारतां याति ॥ २२४

உண்மையாக விசாரணைசெய்தால், வெல்லமும் அதனுடைய குணமாகிய இனிப்புச் சுவையும்போல், அழியக்கூடியதாயினும் மனிதசரீரமும் பரமாத்மாவினால் தோன்றியதினாலும் எப்பொழுதும் அந்தப் பாவனையிலேயே ஈடுபட்டால் தன்மயமாக ஆகிவிடுகிறது.

किं [illegible]नरनन्तशक्तेर्लीलावपुरीश्वरस्येह ।
[illegible]किकानि स्वमायया विदधतो नृहरेः ॥ २२५

அப்படியிருக்கையில், எல்லையில்லா வன்மைவாய்ந்தவரும், லீலாமானுஷவடிவம்கொண்டவரும், உலகத்தோர்

களால் செய்வதற்கரிய செயல்களை தன்னுடைய மாயாவிலா சத்தினால் செய்கின்றவருமாகிய புருஷசிரேஷ்டருடைய சரீரத்தை பரமாத்மரூபம் என்று கூறவேண்டுமோ?

मृद्भक्षणेन कुपितां विकसितवदनां स्वमातरं वक्त्रे ।
विश्वमदर्शयदखिलं किं पुनरथ विश्वरूपोऽसौ ॥ २२६

தான் மண்ணை உண்டதினால் கோபமடைந்த தாயாருக்கு தன்னுடைய முகத்தில் உலகத்தைக் காண்பித்து தாயாருக்கு வியப்பையளித்தவர், விச்வரூபத்தையே பெற்றுக்கொண்டார் என்றால் வேறு என்ன கூறுவது!

---

## १९. आनुग्रहिकप्रकरणम्

विषविषमस्तनयुगलं पाययितुं पूतना गृहं प्राप्ता ।
तस्याः पृथुभाग्याया आसीत्कृष्णार्पणो देहः ॥ २२७

பகவான் அனுக்கிரகம்செய்ததைக் கூறும் பிரகரணம்.

விஷத்தினால் கடுமையான ஸ்தனங்களைக் குடிக்கும்படி செய்ய கிருஷ்ணருடைய கிருகத்திற்குச் சென்ற பூதனை மாபெரும் பாக்கியமுடையவள். ஏனெனில் அவளுடைய தேகம் ஸ்ரீகிருஷ்ணருக்கு அர்ப்பணஞ்செய்யப்பட்டதாயிற்று.

अनयत्पृथुतरशकटं निजनिकटं वा कृतापराधमपि ।
कण्ठाश्लेषविशेषादवधीद्बाल्येऽसुरं कृष्णः ॥ २२८

தனக்குத் தீங்கை விளைவித்த சகடன் என்கிற பெரிய அசுரனைக் கழுத்தில் அணைத்துத் தன் உலகத்திற்கு அனுப்பினார்.

यमलार्जुनौ तरू उन्मूल्योलूखलगतश्चिरं खिन्नौ ।
रिङ्खणभूमौ स्वमालयं प्रापयन्नृहरिः ॥ २२९

வெகுகாலமாக சாபத்தினால் வருந்தி மருதமரங்களாக இருந்த இருவர்களை [நளகூபரமணிக்ரீவர்களை] உரலில் கட்டுண்ட ஸ்ரீகிருஷ்ணர், அவர்களின் சாபத்தை நீக்கித் தம்முடைய உலகத்திற்கு அனுப்பினார்.

नित्यं त्रिदशद्वेषी येन च मृत्योर्वशीकृतः केशी ।
काकः कोऽपि वराको बकोऽप्यशोकं गतो लोकम् ॥

எப்பொழுதும் தேவர்கட்குத் தீமை செய்துவந்த கேசியும், கொக்கின் உருவத்தைக்கொண்ட ஒரு அசுரனும், காகாசுரனும் மரணத்தை நீக்கப்பெற்று தன்வசமாகச் செய்யப்பட்டு மோக்ஷமடைவிக்கப்பட்டனர்.

गोगोपीगोपानां निकरमहिं पीडयन्तमतिवेगात् ।
अनघमघासुरमकरोत्पृथुतरमुरगेश्वरं भगवान् ॥ २३१

பசுக்களுக்கும், இடையர்களுக்கும், அவர்களுடைய பெண்களுக்கும் தீங்கு செய்த மாபெரும்உடலைக்கொண்ட 'அகன்' என்ற அசுரனை விரைவில் பகவான் அநகனாகச் (பாபம் நீங்கியவனாக) செய்தார்.

पीत्वाऽरण्यहुताशनमसह्यतत्तेजसो हेतोः ।
दग्धान्मुग्धानखिलाञ्जुगोप गोपान्कृपासिन्धुः ॥ २३२

கருணைக்கடலான ஸ்ரீகிருஷ்ணபகவான், கடுமையான காட்டுத்தீயினுடைய கடும் ஜ்வாலையினால் தாபத்தையடைந்த இடையர்களை அந்தத்தீயையே உட்கொண்டு காப்பாற்றினார்.

पातुं गोकुलमाकुलमशनितटिद्वर्षणैः कृष्णः ।
असहाय एकहस्ते गोवर्धनमुद्दधारोच्चैः ॥ २३३

மின்னல், இடி, மழை இவைகளால் துன்பமடைந்த இடையர்குலத்தைக் காப்பாற்றுவதற்காக ஸ்ரீகிருஷ்ணர்,

மற்றவர்களுடைய உதவியில்லாமலேயே, ஒரு கையினால் 'கோவர்த்தனகிரியை'க் குடையாகத் தாங்கினார்.

वासोलोभाकलिते धावद्रजकं शिलातलैर्हत्वा ।
विस्मृत्य तदपराधं विकुण्ठवासोऽर्पितस्तस्मै ॥ २३४

தனக்கு ஆடையணிந்துகொள்ள விருப்பமுண்டாக அதற்கு இடையூறு கூறின வேஷ்டிகளை வெளுக்கின்ற வண்ணான் செய்த குற்றத்தையகற்றிக் கற்களால் கொன்று அவனுக்கு வைகுண்டலோகத்தில் வாசமளிக்கப்பட்டது.

त्रेधा वक्रशरीरामतिलम्बोष्ठीं स्खलद्वपुर्वचनात् ।
स्रक्चन्दनपरितोषात्कुब्जामृज्वाननामकरोत् ॥ २३५

உடலில் மூன்று கோணல்களுடையவளும், தொங்குகின்ற உதடுடையவளும், ஆகிய கூனி (மந்தரை என்பவள்) உடல் நடுங்கிக்கொண்டுச் சொற்களைக்கூறி தனக்கு சந்தனக் குழம்பளித்தமையால் சந்தோஷமடைந்து அவளுடைய உடலிலுள்ள கோணல்களை நீக்கி அழகியவளாக அமைத்தார்.

निहतः पपात हरिणा हरिचरणाग्रेण कुवलयापीडः ।
तुङ्गोन्मत्तमतङ्गः पतङ्गवद्दीपकस्याग्रे ॥ २३६

தீபத்திற்கெதிர்த்து பறக்கும் ஈசல் நாசமடைவது போல் தன்னையண்டினவர்களுடைய பாபத்தை நீக்கும் தன்மையுள்ள காலின் நுனியால் ஸ்ரீகிருஷ்ணனாலுதைக்கப்பட்ட பராக்கிரமசாலியான 'குவலயாபீடம்' என்ற மதயானை இலகுவாக கொல்லப்பட்டது. நற்கதியுமளிக்கப்பெற்றது.

युद्धमिषात्सह रङ्गे श्रीरङ्गेनाङ्गसंगमं प्राप्य ।
मुष्टिकचाणूराख्यौ ययतुर्निःश्रेयसं सपदि ॥ २३७

யுத்த அரங்கத்தில் ஸ்ரீ ரங்கநாதருடன் குஸ்திசெய்தல் என்ற வியாஜமாக அவருடைய உடலுடன் சம்பந்தத்தை அடைந்த முஷ்டிகன், சாணூரன் என்ற இரு பயில்வான்கள் உடனே முக்திசுகத்தைப் பெற்றனர்.

देहकृतादपराधाद्वैकुण्ठोत्कण्ठितान्तरात्मानम् ।
यदुवरकुलावतंसः कंसं विध्वंसयामास ॥ २३८

வைகுண்டலோகத்திற்குச் செல்ல மிகக் குதூகலத்துடன் கூடிய மனமுடையவனாயினும், அதனையடைவதற்குத் தடையாக இருந்த அவனது தேகாபிமானத்தை நாசஞ்செய்து கம்ஸனை, யதுகுலத்திற்கு திலகமாக விளங்கிய ஸ்ரீகிருஷ்ணர் வைகுண்டலோகத்திற்கு அனுப்பினார்.

हरिसन्दर्शनयोगात्पृथुरणतीर्थे निमज्जते तस्मै ।
भगवान् प्रादाच्चैद्याय सायुज्यम् ॥ २३९

போராகிய பெரும் தீர்த்தத்தில் ஹரியை தர்சனஞ் செய்து ஸ்னானஞ்செய்த சிசுபாலனுக்கு உடனே அந்த பகவான் ஸாயுஜ்யமுக்தியை யளித்தார்.

मीनादिभिरवतारैर्निहताः सुरविद्विषो बहवः ।
नीतास्ते निजरूपं तत्र च मोक्षस्य का वार्ता ॥ २४०

மேலும், மீன் முதலிய அவதாரங்களிலும் பகவானுடைய கைகளினாலேயே கொல்லுண்ட அநேக அசுரர்கள் பகவானுடைய ஸாயுஜ்யத்தை அடைந்தார்கள். அவர்களுக்கு மோக்ஷசுகம் கிடைத்தது என்பதுபற்றிக் கூறவேண்டுமோ?

ये यदुनन्दननिहतास्ते तु न भूयः पुनर्भवं प्रापुः ।
तस्मादवताराणामन्तर्यामी प्रवर्तकः कृष्णः ॥ २४१

யாதவராகிய ஸ்ரீகிருஷ்ணரால் வதைசெய்யப்பட்ட அசுரர்கள் மறுபிறப்பை அடையவில்லை. ஆகையால், அந்த ஸ்ரீகிருஷ்ணர் எல்லா அவதாரங்களுக்கும் காரணமாகிய அந்தரியாமியாகிய பரமாத்மா.

ब्रह्माण्डानि बहूनि पङ्कजभवान्प्रत्यण्डमत्यद्भुतान्
गोपान्वत्सयुतानदर्शयदजं विष्णूनशेषांश्च यः ।
शंभुर्यच्चरणोदकं स्वशिरसा धत्ते च मूर्तित्रयात्
कृष्णो वै पृथगस्ति कोऽप्यविकृतः सच्चिन्मयो नीलिमा ॥

ஒவ்வொரு பிரம்மகல்பத்திலும் சிருஷ்டிக்கப்பட்ட அநேக பிரம்மாண்டப்பொருள்களையும், விஷ்ணுரூபமாகிய அநேக இடையச்சிறுவர்களையும், கன்றுகளையும், எவர் தோற்றுவித்தாரோ, எவருடைய பாதங்களிலிருந்தும் தோன்றிய கங்காநதியைப் பரமசிவன் தன்னுடைய ஜடையில் தாங்குகின்றனரோ, அத்தகைய ஸ்ரீகிருஷ்ணரைக்காட்டிலும் ஸச்சிதானந்தமாகிய விகாரமற்ற மற்றொரு பரம்பொருளுண்டோ?

कृपापात्रं यस्य त्रिपुररिपुरम्भोजवसतिः
सुता जह्नोः पूता चरणनखनिर्णेजनजलम् ।
प्रदानं वा यस्य त्रिभुवनपतित्वे विभुरपि
निदानं सोऽस्माकं जयति कुलदेवो यदुपतिः  २४३

திருபுரஸம்ஹாரம் செய்த பரமசிவனும், தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மதேவரும் எவருடைய கருணைக்குப் பாத்திரமாக இருக்கின்றனரோ, எவருடைய பாதங்களை (அடைந்ததினால்) சுத்தம் செய்ததினால் கங்கை பரிசுத்தமாக விளங்குகின்றதோ, எவருக்கு தானம் செய்தமையால் பலி சக்கிரவர்த்தி மூன்று உலகங்களுக்கும் அதிபதியாக பவித்

தானே, உலகங்களுக்குக் காரணமாகிய அந்த யதுபதி எமது குலதெய்வமாக விளங்குகின்றார்.

मायाहस्तेऽर्पयित्वा भरणकृतिकृते मोहमूलोद्भवं मां
मातः कृष्णाभिधाने चिरसमयमुदासीनभावं गताऽसि ।
कारुण्यैकाधिवासे सकृदपि वदनं नेक्षसे त्वं मदीयं
तत्सर्वज्ञे न कर्तुं प्रभवति भवती किं नु मूलस्य शान्तिम् ॥

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரியார், ஸ்ரீகிருஷ்ணபகவானை தாயாக உருவகப்படுத்திக் கூறுகின்றார்:— ஹே தாயாகிய ஸ்ரீகிருஷ்ணரே! அவித்தையாகிய காரணத்தினால் ஜனனமடைந்த என்னை வளர்ப்பதற்கு மாயையாகிய வளர்ப்புத் தாயினிடம் ஒப்பித்துவிட்டு வெகுகாலமாக என்னைக் கவனிக்காமல் பாராமுகமாக ஆகிவிட்டீர்கள். இணையற்ற கருணைக்கடலே! எல்லாமறிந்தவரே! என்னுடைய முகத்தை ஒரு தடவைகூட பார்க்காமலிருக்கிறீர்களே! எல்லா வல்லமையுமுள்ளவர் தாங்கள். என்னுடைய ஸம்ஸாரதுக்கத்திற்குக்காரணமாகிய அவித்தையான இருளை வேருடன் அறுக்க தங்களால் முடியாத காரியமோ? [தங்களுடைய அன்பாகிய தாய்ப்பாலை அருந்தினேனேயாகில் என் பிறவித்துன்பம் பறந்துவிடுமன்றோ].

उदासीनः स्तब्धः सततमगुणः सङ्गरहितो
भवांस्तातः काऽतः परमिह भवेज्जीवनगतिः ।
अकस्मादस्माकं यदि न कुरुते स्नेहमथ त-
द्वसस्व स्वीयान्तर्विमलजठरेऽस्मिन्पुनरपि ॥ २४५

தாங்கள் உதாசீனமானவர். உலகங்களுக்கெல்லாம் தந்தை. குணங்களில் ஒருபொழுதும் சம்பந்தப்படாதவர்.

அசைவற்றவர். ஒன்றிலும் பற்றில்லாதவர். தங்களைவிட எனக்கு யாது சக்தியுள்ளது? திடமெனை அன்பையளிக்கா விடினும், மோக்ஷத்தையடையும்படி என்னுடைய சுத்தமான உள்ளத்தில் வாஸம் செய்வீராக.

लोकाधीशे त्वयीशे किमिति भवभवा वेदना त्वाश्रितानां
संकोचः पङ्कजानां किमिह समुदिते मण्डले चण्डरश्मेः ।
भोगः पूर्वार्जितानां भवति भुवि नृणां कर्मणां चेदवश्यं
तन्मे दृष्टैर्नृपुष्टैर्ननु दनुजनृपैरूर्जितं निर्जितं ते ॥ २४६

உலகங்களுக்கெல்லாம் சிறந்த நாயகராகிய ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவாகிய நீங்கள் நாதராக இருக்கையில் தங்களை அடைந்தவர்களுக்கு ஸம்ஸாரதுக்கம் எவ்வாறு உண்டாக லாம்? சூரியன் உதித்தால் தாமரைமலர்களுக்கு மலர்ச்சியில் லாமையுண்டாகுமா? முன்வினைப்பயனை மனிதர்கள் அனுப விக்கத்தான் வேண்டும். அதை யான் நீக்கமுடியாது என்று சொல்வீர்களேயாகில் அப்பொழுது யான் கண்ட தேகபுஷ்டி யடைந்த மனிதர்களுக்கும், அசுரர்களுக்கும், அரசர்களுக் கும் வெற்றியேற்படுமென்று கூறவேண்டும். இவ்வாறு நிகழவில்லை. அநேக மனிதர்களும், அசுரர்களும் துஷ்டர் களாயிருந்தும், புஷ்டியான உடலுள்ளவர்களாகவிருந்தும் தங்களுடைய ஆச்ரயபலத்தால் உடலகன்று உத்தமசுகத்தை எய்தியுள்ளனர். ஆகையால் தங்களை அண்டினவர்களுக்கு ஸம்ஸாரதாபமே நிலைக்காது.

नित्यानन्दसुधानिधेरधिगतः सन्नीलमेघः सता-
मौत्कण्ठ्यप्रबलप्रभञ्जनभरैराकर्षितो वर्षति ।
विज्ञानामृतमद्भुतं निजवचोधाराभिरारादिदं
चेतश्चातक चेन्न वाञ्छसि तृषाक्रान्तोऽपि सुप्तोऽसि किम् ॥

நித்யானந்தமாகிய மாபெருங்கடலிலிருந்து நீரைப்பருகிய ஸ்ரீகிருஷ்ணராகிய நீலமேகம் சான்றோர்களுடைய ஆர்வமாகிய காற்றினால் தூண்டப்பட்டு தன்னுடைய சொற்பொழிவுகளால் ஞானமாகிய (இறப்புப் பிறப்புப்பிணியை அகற்றும் ஔஷதமாகிய) அமிருதத்தை அருளுகையில், ஹே மனமாகிய சாதகமே! தாகத்தினால் வருந்தியும் நீ அதனை விரும்புகிறதில்லையா? அல்லது தயிலுகின்றாயா?

चेतश्चञ्चलतां विहाय पुरतः संधाय कोटिद्वयं
तत्रैकत्र निधेहि सर्वविषयानन्यत्र च श्रीपतिम् ।
विश्रान्तिर्हितमप्यहो क्वनु तयोर्मध्ये तदालोच्यतां
युक्त्या वाऽनुभवेन यत्र परमानन्दश्च तत्सेव्यताम् ॥

மனமே! சஞ்சலஸ்வபாவத்தை விட்டு இரு கோடிகளில் கவனம் செலுத்துவாயாக. அதாவது, திராஸின் இரு தட்டங்களில்போல் இரு பாகங்களில், ஒன்றில் உலகங்களிலுள்ள பொருள்களனைவற்றையும், மற்றொன்றில் ஸ்ரீபதியையும் வைத்து சோதனைசெய்துப் பார். எதனால் நிலையுள்ள ஓய்வுசுகம் நிலவுகின்றது? யாது நமக்கு ஹிதமாகவுள்ளது? யாதில் பேரானந்தம் உண்டாகுகின்றது? என்ற விஷயங்களை யுக்திகளாலும் தன்னுடைய அனுபவத்தினாலும் நன்கு உணரவேண்டும். பிறகு அதனைப் பற்றிக் கொள்ளவேண்டும்.

पुत्रान्पौत्रमथ स्त्रियोऽन्ययुवतीर्वित्तान्यथोऽन्यद्धनं
भोज्यादिष्वपि तारतम्यवशतो नालं समुत्कण्ठया ।
नैतादृग्यदुनायके समुदिते चेतस्यनन्ते विभौ
सान्द्रानन्दसुधार्णवे विहरति स्वैरं यतो निर्भयम् ॥ २४९

பற்பல விதங்களில் மாறுபட்ட மக்கள், பேரன்மார்கள், பெண்கள், செல்வங்கள், மற்றுமநேக போகப்பொருள்கள் ஆகியவைகளில் மிக்கப் பற்றுதல் கொள்ளவேண்டாம். இவைகளைப்போல் வேற்றுமையற்றவரும், எங்கும் நிறைந்தவரும், முடிவற்றவருமாகிய யதுநாயகர் மனதில் இடைவிடாது தோன்றி, நிறைந்த பேரானந்தக்கடலாகிய அவரிடத்தில் இஷ்டம்போல் விளையாடுகையில் ஒரு காலத்தும் ஒன்றிலிருந்தும் அச்சம் அணுகாது.

काम्योपासनयाऽर्थयन्त्यनुदिनं किंचित्फलं सेप्सितं
किंचित्स्वर्गमथापवर्गमपरैर्योगादियज्ञादिभिः ।
अस्माकं यदुनन्दनांघ्रियुगलध्यानावधानार्थिनां
किं लोकेन दमेन किं नृपतिना स्वर्गापवर्गैश्च किम् ॥

சிலர் பயன்களை விரும்பி அதற்கு உரிய உபாஸனைகளைச் செய்து அந்த பயன்களை ஆர்வத்துடன் அனுபவிக்கின்றனர். வேறு சிலர் யோகம், யாகம் முதலியவற்றைச் செய்து, யோகஸித்தி (முக்தி), ஸ்வர்க்கம் முதலிய சுகத்தையும் விரும்புகின்றனர். யாதவகுலதிலகராகிய ஸ்ரீ கிருஷ்ணருடைய திருவடித்தாமரைமலர்களையே தியானம் செய்தல் என்ற விருதம் கொண்ட யாம் மற்ற உலகசுகங்கள், அதற்குரிய பொறிகளின் அமைதி, இம்மையில் அரசனுடைய அனுகூலம், மறுமையில் ஸ்வர்க்கம், மோக்ஷம் இவைகளில் ஒன்றையும் விரும்புகிறோமில்லை.

आश्रितमात्रं पुरुषं स्वाभिमुखं कर्षति श्रीशः ।
लोहमपि चुम्बकाश्मा संमुखमात्रं जडं यद्वत् ॥ २५१

காந்தம் எதிரிலிருக்கும் செயலற்ற இரும்பை இழுப்பதுபோல் ஸ்ரீ தேவியின் கொழுநர் தன்னை அண்டினவனை தனக்கு நேராக இழுத்துக்கொள்ளுகிறார்.

अयमुत्तमोऽयमधमो जात्या रूपेण संपदा वयसा ।
श्लाघ्योऽश्लाघ्यो वेत्थं न वेत्ति भगवाननुग्रहावसरे ॥

*அந்த பகவான் அனுக்கிரகம் செய்யும் வேளையில் பிறப்பினுலும், அழகினுலும், செல்வத்தினுலும், வயதினுலும் சிறந்தவன் இவன், இகழ்ந்தவன் இவன் என்று எண்ணுகிறதில்லை.*

अन्तःस्थभावभोक्ता ततोऽन्तरात्मा महामेघः ।
खदिरश्चम्पक इव वा प्रवर्षणं किं विचारयति ॥ २५३

*அந்தராத்மாவாகிய அவர் உள்ளத்தை நன்கு உணருகிறவர். மேகம் நீர் பொழியும்பொழுது இது கருங்காலி, இது சம்பகச்செடி என்ற வித்தியாசம் காட்டுகின்றதா? என்பதை யோசனை செய்யுங்கள்.*

यद्यपि सर्वत्र समस्तथाऽपि नृहरिस्तथाऽप्येते ।
भक्ताः परमानन्दे रमन्ति सदयावलोकेन ॥ २५४

*பகவான் எங்கும் ஒருபோலுள்ளவர். ஆயினும், அவருடைய கருணைக் கடைக் கண்களால் பக்தர்கள் பரமானந்தரூபியான அவரிடம் சந்தோஷமடைகின்றனர்.*

सुतरामनन्यशरणाः क्षीराद्याहारमन्तरा यद्वत् ।
केवलया स्नेहदृशा कच्छपतनयाः प्रजीवन्ति ॥ २५५

*வளர்ச்சிக்குக் காரணமாகிய தாய்ப்பால் முதலியவையில்லாவிடினும், வேறு வழியற்ற ஆமைக்குட்டிகள் தாயின் அன்பு நிரம்பிய கண் பார்வையினுலேயே எவ்வாறு வளருகின்றனவோ,*

यद्यपि गगनं शून्यं तथाऽपि जलदामृतांशुरूपेण ।
चातकचकोरनाम्नोर्दृढभावात्पूरयत्याशाम् ॥ २५६

ஆகாயம் சூன்யமான பொருளாயினும், மேகங்கள், சந்திரன் என்பவைகள் அந்த ஆகாயத்தில் தோன்றுவதால் முறையே சாதகப்பறவையின் தாகத்தைத் தணிக்கவும், சகோரத்திற்குப் பானப்பொருளையளிக்கவும் எவ்வாறு செய்கின்றதோ,

तद्वद्भजतां पुंसां दृग्वाङ्मनसामगोचरोऽपि हरिः ।
कृपया फलत्यकस्मात्सत्यानन्दामृतेन विपुलेन ॥ २५७

அதுபோலவே, கண்களுக்கும், மனதிற்கும், வாக்கிற்கும் எட்டாதவராயினும், பகவான் பஜிக்கின்றவர்களுக்கு (அவர்கள் எதிர்பார்க்காமலேயே) விசாலமான கருணைகடாக்ஷத்தினுல் பேரானந்தத்தையளிக்கின்றூர்.

इति श्रीमत्परमहंसपरिव्रजकाचार्यवर्यस्य श्रीगोविन्द-
भगवत्पूज्यपादशिष्यस्य श्रीमच्छङ्करभगवतः कृतौ
प्रबोधसुधाकरः समाप्तः ॥

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியரும்,
ஸ்ரீகோவிந்தபகவத்பூஜ்யபாதருடைய சிஷ்யருமாகிய
ஸ்ரீமத் சங்கரபகவத்பாதருடைய செய்யுட்களில்
பிரபோதசுதாகரம் [ஆத்மஞானமிருதக்கடல்]
முற்றிற்று.

॥ ओम् ॥



# शुद्धिपत्रम्

| Page. | अशुद्धम् | शुद्धम् |
| --- | --- | --- |
| 12 | பிலும் | பிளும் |
| 14 | கிறார்கள். | கின்றது. |
| 38 | அனே | அநே |
| 40 | स्तवा | स्ताव |
| 60 | பொரி | பொறி |